என்றும் மறவோம்... வாழ்நாள் வரை

PARLE

வாழ்க்கைப் பாதை இதுவே சரி

வாழ்க்கைப் பாதையில் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் ஒரு சோதனையே. எந்தப் பாதையில் செல்வது, எதைத் தவிர்ப்பது: நம்மை வேறுபடுத்தும் அடையாளம் இதுவன்றோ. ஒருவித சுயநலமின்றி எதிர்பார்ப்பின்றி, பிறருக்கு உதவுதல்; பாதையில் செல்கையில், மற்றவர்களின் துயர் நீக்குதல். உண்மையான வாழ்க்கை என்பது இதுதானே. என்றும் மறவோம்... வாழ்நாள் வரை. வாழ்க்கைப் பாதை இதுவே சரி.




வருடக்கணக்காக இந்தியாவின் அனைத்திலும் அதிகமாக விற்பனையாகும் பிஸ்கட் • சுவை மிகுந்தது, உண்மையான சக்தி நிறைந்தது •

everest/95/PPL/110tm

# தைப்பதற்குத் தயாரான ஜீன்ஸ்களின் மிகப் பெரிய உற்பத்தியாளர் வழங்கும் ஒரு சிறிய காணிக்கை.

இளம் அஞ்சா நெஞ்சருக்கென தயாரிக்கப் பட்டுள்ள ஜீன்ஸ் மட்டும் அளவில் சிறியதாக இருக்க முடியுமா ? அறிமுகப்படுத்துகிறோம் ரஃப் அன்ட் டஃப் ஜூனியர். இந்த கிட்டில் முழு 0.85 மீட்டர் சிறந்த அரவிந்த் டெனிம் (132 செ.மீ. வரை உயரமுள்ளவர்களுக்காக), உறுதியான ஜிப், நேர்த்தி யான லேபல், ரிவெட், பட்டன் மற்றும் பேச்சஸும் உள்ளன. உங்கள் குழந்தையின் உயரத்திற்கேற்ப ஜீன்ஸ் தையுங்கள். பிறகு பாருங்கள், அவர்கள் எண்ணம் எவ்வாறு செயல்படுத்தப்படுகிறது என்று !

Trikaya Grey AML 5.96 TAM




A QUALITY PRODUCT FROM ARVIND MILLS

**JUNIOR**

**தைப்பதற்குத் தயாரான ஜீன்ஸ்**

இப்பொழுது விற்பனையாகிறது!

# மங்கை

## டிசம்பர் 1996

- ☆ சத்ய சாயிபாபாவின் அற்புதங்கள்
- ☆ யாழ்ப்பாணம் அனலை தீவு ஐயனார்
- ☆ அனுராதாரமணனின் சிந்தனைக் கட்டுரை
- ☆ பெண்களே எச்சரிக்கையாக இருங்கள் (நுகர்வோர் விழிப்புணர்வு)
- ☆ பெண்களுக்கு தேவைப்படும் கல்விமுறை
- ☆ பணம் என்னடா பணம் பணம்!
- ☆ நிர்மலா சுரேஷ் கவிதை
- ☆ கம்யூட்டர் கல்வியும் பெண்களும்
- ☆ அதிர்ஷ்டம் தரும் மறுமணம்
- ☆ காஞ்சிப் பெரியவர் வாழ்வில் - மாண்டலின் சீனிவாசன்
- ☆ ஸ்ரீ ஜயேந்திரர் பதில்கள்
- ☆ சராசரியானவர்கள் சாதிக்கும் ரகசியம்
- ☆ இசைக்குயில் செளம்யா - சில குறிப்புகள்
- ☆ மருத்துவ கேள்வி பதில்கள்
- ☆ மனைவியின் பொறுப்பை கணவரும் பகிர்ந்து கொள்ளலாமே...
- ☆ செஸ் விளையாட்டில் பெண்கள்
- ☆ கடிதம் பேசுகிறது
- ☆ சுவைமிகு சோளச் சமையல்

மற்றும் சிறுகதைகள், வீட்டுக் குறிப்புகள்

விலை ரூ. 9/-

# இன்று சந்தியுங்கள் உங்கள் கிரிக்கெட் ஹீரோவை!



World Cup-96 Achievers Collection

# FREE

**Cricketer Card With Every Pack**



ரூ. 13.50 மட்டும்




- சுவையானது
- சிக்கனமானது
- எளிதில் தயாரிக்கக் கூடியது



கிரிக்கெட் விளையாடும் குழந்தைகளே!

நீங்கள் விரும்பும் ரஸ்னா ஸ்பிரெட் மேக்கர் பேக்கைத் திறந்ததும் பரவசம் ஆரம்பமாகிறது. உங்கள் அம்மா இந்த சுவைமிக்க ஸ்பிரெட் மேக்கரால் உங்களுக்காக தயாரிக்கப்போகும் சுவையான பண்டங்களைப் பற்றி நாங்கள் பேசவில்லை. நீங்கள் விரும்பும் ஒவ்வொரு ரஸ்னா ஸ்பிரெட் மேக்கரிலும் ஒரு மனங்கவரும் கிரிக்கெட் வீரர் கார்டு உங்களுக்கென உள்ளது. அதுவும் **இலவசம்!**

இப்போது சுவைமிக்க ரஸ்னா ஸ்பிரெட் மேக்கரை ஸாண்ட்விச், சப்பாத்தி அல்லது பூரியுடன் சுவைத்து மகிழ இன்னொரு காரணம்.

**இச்சலுகை இல்லாமலும் பேக்குகள் கிடைக்கின்றன.**

Mudra EAMR 9610 Tam.

# போலியோ இல்லாத இந்தியா!

இலட்சியத்தை நெருங்குகிறோம்

இன்னும் அடுத்த அடியை எடுத்து வைப்போம்.

**தேசிய போலியோ நோய் தடுப்பு தினங்கள்:**

## டிசம்பர் 7, 1996
## ஜனவரி 18, 1997




தாய்மார்களே!



நீங்கள் ஏற்னெவே உங்கள் குழந்தைக்கு சொட்டு மருந்து போட்டிருந்தாலும், போன வருடம் தேசிய போலியோ நோய் தடுப்பு தினங்களில் சொட்டு மருந்து போட்டிருந்தாலும், தற்போது குழந்தைக்கு சுகவீனம் அல்லது வயிற்றுப் போக்கு போன்ற வியாதிகள் கண்டு உடல் நலம் பாதிக்கப்பட்டிருந்தாலும் பாதுகாப்பு நலன் கருதி மீண்டும் ஒரு முறை உங்கள் அருகில் உள்ள போலியோ சொட்டு மருந்து முகாம்களில் டிசம்பர் 7, மறுபடியும் ஜனவரி 18 தேதிகளில் ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு கூடுதல் சொட்டு மருந்து தவறாமல் போடுங்கள்.



*ஆரோக்கியமான குழந்தைகளின் எதிர்காலம் நம் நாட்டின் எதிர் காலம்.*




## கி.பி. 2000 – த்தில் போலியோ இல்லாத இந்தியாவை உருவாக்குவதில் பங்கேற்போம்.






# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி



## குழந்தைகளின் உரிமைகளைப் பாதுகாத்தல்

கடந்த மாதத்தில் வழக்கம் போல குழந்தைகளின் தினம் கொண்டாடப்பட்டது. யாவரும் குழந்தைகளின் உரிமைகளையும் நலனையும் பற்றி வானுயரப் பேசினார்கள். பிரமாதமாக ஏதேதோ செய்யப் போவதாகக் கூறினார்கள். எல்லாம் அந்த ஒருநாள் பேச்சோடு சரி. அதற்குப் பின் குழந்தைகளைப் பற்றிச் சிந்திக்க மறந்தே விட்டார்கள்.

ஆறு வருடங்களுக்கு முன் திடீரென ஒருவருக்கு குழந்தைகளின் உரிமை பற்றிய நினைவு வந்தது. இதன் பயனாக ஐ.நா. சபையும் குழந்தைகளின் உரிமைகள் பற்றியும் நலனைப் பற்றியும் ஒரு தீர்மானத்தையும் நிறைவேற்றியது.

ஆனால் இன்று நம் நாட்டில் குழந்தைகளின் நிலை என்ன? குழந்தைகளுக்குக் கல்வி அளித்து அவர்கள் வேலைக்கு அனுப்பப்படுவதைத் தடுக்க என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன? ஒரு கணிப்பின்படி நம் நாட்டில் ஒரு கோடி குழந்தைகள் பள்ளிகளுக்கு அனுப்பப்படுவதில்லை. வேலை செய்ய அனுப்பப்படுகிறார்கள். இதைத் தடுக்க சட்டம் இருந்தும் அது சரியாக செயல்படுத்தப்படுவதில்லை. இந்நிலையில் ஐ.நா.தான் என்ன செய்ய முடியும்?

இதுபற்றிச் சிந்தித்து நாம் செயல்பட வேண்டும்.

மதிமுகம்: 99 டிசம்பர் 1996 புன்னகை: 6

தனிப்பிரதி: ரூ.6.00 வருட சந்தா: ரூ.72.00






Rs. 30/-




Rs. 40/-




Rs. 30/-




Rs. 30/-




Rs. 25/-




Rs. 30/-

**CHANDAMAMA BOOKS ARE ALREADY A LEGEND! THEY OPEN A NEW HORIZON ON THE WORLD OF LITERATURE FOR THE YOUNG**

Added to the six titles by **Manoj Das** is the charming seventh–

**WHEN THE TREES WALKED**

by the inimitable story-teller **Ruskin Bond**




Rs. 30/-

Among the titles in the process of production are:

**STORY OF KRISHNA**
**STORY OF RAMA**
**STORY OF BUDDHA**



For details, write to:

**CHANDAMAMA BOOKS**
Chandamama Buildings
Vadapalani, Madras - 600 026.

செய்திகளும் தகவல்களும்

# அமைதிக்கான நோபல் பரிசு

இந்தோனேஷியாவின் பக்கம் டைமூர் என்ற சிறிய தீவு உள்ளது. அங்கு அமைதியை நிலை நாட்டி சுதந்திரம் பெற சாத்வீக முறையில் அஹிம்சை வழியில் பாடுபட்டுக் கொண்டிருக்கும் இரு தலைவர் களுக்கு இந்த ஆண்டின் அமைதிக்கான பரிசைக் கொடுப்பது என நோபல் பரிசுக் கமிட்டி தீர்மானித்துள்ளது. அவர்கள் பிஷப் கார்லோஸ் பிலிப்பும், ஜோஸ் ரோமானி ஹோர்தாவும் ஆவர்.

சுமார் ஐநூறு ஆண்டுகள் வரை டைமூர் தீவு போர்த்துக்கீசியர் ஆதிக்கத்தில் இருந்தது. இரண்டாவது உலகப்போருக்குப்பின் பல நாடு களில் காலனி ஆதிக்கம் ஒழிந்து அவை சுதந் திரம் பெற்றன. டைமூர் தீவு மக்களும் சுதந்திரப் போராட்டத்தை துவக்கினார்கள். இந்தப் போராட்டம் 1987ல் ஒரு சிக்கலான கட்டத்தை அடைந்து போர்த்துக்கீசியர் ஆட்சிப் பொறுப்பை யாரிடமும் ஒப்படைக்காமலேயே அத்தீவை விட்டுப் போய்விடத் தீர்மானித் தனர். அப்போது சுதந்திரப் போராட்டத்தை நடத்தி வந்த இடதுசாரி கட்சி பிரீடெலின் தலைநகர் தலியிலிருந்து டைமூரை சுதந்திர நாடு எனப் பிரகடனம் செய்தது. ஆனால் இந்தோனேஷியா இதை அங்கீகரிக்காமல் டைமூரை தன் மாநிலங்களில் ஒன்று என அறி வித்து தன் ராணுவத்தை அங்கு அனுப்பியது. ஆனால் ஐ.நா. இதை ஒப்புக்கொள்ளவில்லை.

இந்தோனேஷியப் படை இரண்டு லட்சம் டைமூர் வாசிகளைக் கொன்றது. 1991 நவம்பர் 12ல் மனித உரிமைக்காகப் போராடுபவர் ஒருவர் கொல்லப்பட்டார். அதற்காக ஏற் பாடு செய்யப்பட்ட அனுதாபக் கூட்டத்தை இந்தோனேஷிய ராணுவம் துப்பாக்கிப் பிர யோகம் செய்து கலைத்தது. இதில் 50 பேர் கள் இறந்தார்கள். பிரிடெலின் தலைவரை இந்தோனேஷியா கைது செய்து சிறையில் அடைத்தது. அவர் இதுவரை விடுதலை செய்யப்படவில்லை.

டைமூர் தலைவர் ரோமாணி ஹோர்தா 1975ல் தம் நாட்டை விட்டு வெளியேறி வெளி நாடுகளில் இருந்தபடி தம் நாட்டின் சுதந்திரப் போரை நடத்தி வந்தார். ஐ.நா.வில் அவர் கிழக்கு டைமூரின் அதிகாரபூர்வ பிரதிநிதியாக இருந்தார். டைமூருக்குப் பார்வையாளர் அந் தஸ்து கூட ஐ.நா. கொடுக்காததால் அவர் நியூயார்க்கிலிருந்து ஆஸ்திரேலியாவிற்குச் சென்றார். அங்கு அவர் டைமூரின் பிரதிநிதி யாக இருந்து வருகிறார்.

இந்தோனேஷியா உலகில் பெரிய முஸ்லீம் நாடுகளில் ஒன்று. டைமூரில் 80 சதம் கிருஸ்து வர்கள் உள்ளனர். 1983லிருந்து பிஷப் கார் லோஸ் பிலிப் டைமூரின் சுதந்திரப் போராட் டத்தை பலப்படுத்திக் கொண்டிருக்கிறார். அவர் இந்தோனேஷிய ராணுவம் டைமூரி லிருந்து விலகிய பின் மக்கள் வாக்கெடுப்பு எடுக்க வேண்டும் என ஐ. நா.விற்குக் கடிதம் எழுதியுள்ளார். இதற்கு பதில் கிடைக்குமுன் இந்தோனேஷியா பல டைமூர் வாசிகளைக் கைது செய்து சிறையில் தள்ளியது.

பிஷப்கார்லோஸ் பிலிப்பும், ரோமன் ஹொர்தாவும் டைமூரின் சுதந்திரப் போரை வெளிநாடுகளில் இருந்து கொண்டு நடத்தி வருகிறார்கள். இது அமைதியான முறையில் நடத்தப்பட்டு வருகிறது. அவர்களது இந்த நல்ல முயற்சியைப் பாராட்டவே இந்த நோபல் பரிசு அவர்கள் இருவருக்கும் வழங்கப்பட்டு உள்ளது.







# கவிஞனின் மனைவி

சிவபுரம் ஒரு சிறிய நாடு. அதன் மன்னன் சிவசந்திரன். அவன் கவிஞர்களையும் பண்டிதர்களையும் ஆதரிப்பவனெனப் புகழ் பெற்றிருந் தான். அந்நாட்டில் வாணிதாசன் என்ற இளம் கவிஞன் பெயர் பெற்ற வன். அவன் தன் பேச்சு வன்மையா லும் கவிதைகளாலும் மன்னனின் மனதைக் கவர்ந்து அவனது அன் பிற்குப் பாத்திரமானான். இதனால் மற்ற கவிஞர்களுக்கு அவன் மீது பொறாமை ஏற்பட்டது. அவர்களில் வயதான சில கவிஞர்களை முக்கிய மாகக் குறிப்பிடலாம்.

வாணிதாசன் பண்டிதர் பஞ்ச நதத் தின் மகளான காவேரியை மணந்து கொண்டு அவளது ஊரான தேவிபுரத் திலிருந்து தன் ஊருக்கு அழைத்து வந்தான். காவேரி குடித்தனம் செய்த சில தினங்களுக்குள் வாணிதாசனின் மன இயல்பைக் கண்டு கொண்டாள். அவன் பெண்களை மட்டம் எனக் கருதுவதைக் கண்டாள். அவள் அவனது கவிதைகள் பற்றி இரண் டொரு முறை அவனோடு விவாதிக்க முயன்றபோது அவன் கவிதை பற்றி அவளுக்கு எதுவும் தெரியாது என மண்டையில் அடிப்பது போலக்கூறி மேலே பேசாமல் தடுத்து விட்டான்.

இப்படியே சில நாட்கள் கழிந்தன அப்போது ஆடிப்பண்டிகைக்குச் சில நாட்களுக்கு முன் பஞ்சநதம் தம் மகளை ஊருக்கு அழைத்துச் செல்ல வும் மாப்பிள்ளை பண்டிகைக்கு தேவிபுரத்திற்கு வரவேண்டும் என அழைப்பு விடவும் வந்திருந்தார். வாணிதாசனும் காவேரியை அன்றே அழைத்துச்செல்லலாம் என்றும் தான் பண்டிகை நாளன்று அங்கு வந்து சேர்வதாகவும் கூறவே பஞ்சநதம் தம் மகளை அழைத்துக்கொண்டு தம் ஊருக்குச் சென்றார்.

காவேரி ஊருக்குப் போன மறு நாள் அரச சபையில் வாணிதாசன்

—சிவனார் செல்வன்—

தன் புதிய கவிதை ஒன்றைக் கூறினான். அதில் இயற்கை வர்ணனையே இருந்தது. அவன் உற்சாகமாகக் கவிதையைக் கூறிக் கொண்டிருக்கும்போது மன்னன் சிவசந்திரன் குறுக்கிட்டான்.

அவன் ''இளம் கவிஞரே, உம்மை நான் அறிந்த நாள் முதல் இன்று வரை நீர் இயற்கைக் காட்சிகளை மட்டுமே வர்ணித்து வருகிறீர் இயற்கையைப் படைத்த கடவுளைப் புகழ்கிறீர். ஆனால் அவரது பிரதிநிதியாக நாட்டை ஆளும் மன்னனைப் புகழவில்லையே. இப்படி அரசர்களை நீர் புகழாமல் இருக்க ஏதாவது காரணம் இருக்கிறதா?'' என்று கேட்டான்.



திடீரென சிவசந்திரன் இப்படி ஒரு கேள்வி கேட்டதும் வாணிதாசன் திகைத்துப் போனான். அவனால் சட்டென பதில் கூற முடியவில்லை. அரசனிடம் ஊதியம் பெறும் அவனுக்கு ஏனோ அரசர்கள் மீது வெறுப்பு ஏற்பட்டிருந்தது. அரசர்கள் எவ்வளவு தான் பிறரிடம் அன்பும் ஆதரவும் காட்டினாலும் அவர்கள் அகங்காரம் கொண்டவர்களே என்பது அவன் கணிப்பு. கடவுள்தாம் யாவரையும் காத்து, மன்னித்துக் கை தூக்கி விடுபவர். இக்காரணத்தாலேயே இயற்கையையும் அதை அளித்த கடவுளையும் வாணிதாசன் தன் கவிதைகளில் வர்ணித்து வந்தான்.

வாணிதாசன் எவ்வித பதிலும் கூறாமல் நிற்பதைக் கண்ட கிழக்கவிஞர் கங்காதரர் ''இந்த சிறிய கேள்விக்கு வாணிதாசன் பதில் சொல்லாது நிற்கிறார் என்றால் அதற்கு அவருக்கு பதில் சொல்ல விருப்பம் இல்லை என்பதே பொருள். இதிலிருந்து அவரது ராஜபக்தி எவ்வளவு என்பது நன்கு தெரிகிறது'' என்று கூறி வத்தி வைத்தார். இதைக் கேட்டதும் சிவசந்திரனின் முகம் கோபத்தால் சிவந்தது. உடனே அவன் '' இளம் கவிஞரே! இனிமேல் நீர் என்னிடம் கை நீட்டிப் பணம் வாங்க வரவே வேண்டாம். இனிமேல் நீர் வீட்டில் உட்கார்ந்து கொண்டு உம் இஷ்டப்படி கவிதைகளாக எழுதிக் கொண்டே இரும். போங்கள்'' என்று கடுமையாகக் கூறி முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

அதைக்கேட்ட வாணிதாசனின தலையே சுழன்றது. அவன் மன்னனை வணங்கிவிட்டு எதுவும் பேசாமல் தலை குனிந்து கொண்டு அங்கிருந்து



சென்றான். அப்போது முதல் அவனது மனம் ஒரு நிலையில் இல்லாமல் தத்தளித்தது. அவனுக்கு உணவு செல்லவில்லை. உறக்கமே வரவில்லை. இப்படியே ஒரு வாரம் கழிந்தது. அப்போது அவன் நெடுநாள் காய்ச்சலில் கிடந்தவன் போல உடல் மெலிந்து போய் விட்டான்.

ஒரு நாள் காலை அவன் எழுந்து நடந்து கொண்டே போனான். அவனது கால்கள்தான் அவனை இழுத்துக் கொண்டுபோய் அவனை ஒரு மரத்தடியே தள்ளின. அங்கு வீசிய பூங்காற்றும் சற்று தூரத்தில் ஓடிய சலசலவென்ற தெள்ளிய ஓடையும் அவனது சோர்வைப் போக்கிச் சற்று களிப்பு மூட்டியது. மன்னனது கடுஞ் சொற்களால் சோர்வுற்றிருந்த அவனது மனம் புத்துணர்ச்சி பெற்று மீண்டும் மன்னனின் ஆதரவையும் அன்பையும் பெற்றுவிட முடியுமென்ற நம்பிக்கையைப் பெற்றது. அதற்கான வழி என்ன என்று யோசிக்கலானான்.

அப்போது ஒரு இளைஞன் வந்து அவனை வணங்கி நின்றான். வாணிதாசனும் பதிலுக்கு வணங்கி ''நீங்கள் யாரென்று எனக்குத் தெரியவில்லையே'' என்றான். இளைஞனும் ''நான் உங்கள் மனைவி காவேரியின் ஊரில் இருப்பவன். அவள் எனக்கு சகோதரி போல. அதனால் நீங்கள் எனக்கு அத்தான் உறவு. உங்களை நான் என் சகோதரி காவேரியின் திருமணத்தின் போது எங்கள் ஊரில் பார்த்திருக்கிறேன். ஆனால் என்னை நீங்கள் சரியாக தெரிந்து கொண்டிருக்க மாட்டீர்கள். ஏனெனில் கொஞ்சநேரமே பார்த்து என்னை எப்படி நினைவில் வைத்துக் கொண்டிருக்க முடியும்?'' என்றான்.

வாணிதாசன் அதைக் கேட்டு எதுவும் பேசாமல் இருந்தான். அந்த இளைஞனோ ''நீங்கள் வாரமொரு முறை உங்கள் கவிதைகளைக் கூறி எல்லோரையும் மகிழ்விப்பதாக காவேரி கூறினாள். அவற்றைக் கேட்டு ரசிக்கலாமென்று ஊரிலிருந்து கிளம்பி வந்தேன். நீங்கள் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டான். அப்போதும் வாணிதாசன் எந்த பதிலும் கூறவில்லை.

அதைக் கண்டு அந்த இளைஞன் ''உங்கள் மனம் எதற்கோ வாட்டமுற்றிருக்கிறதே. ஏதாவது விரும்பத்தகாத நிகழ்ச்சி நடந்திருக்கிறதா?'' என்று கேட்டான். வாணிதாசனும்

முதலில் தன் நிலை பற்றிக் கூறத்தயங்கினாலும் பிறகு அந்த இளைஞன் துருவித் துருவிக் கேட்ட கேள்விகளுக்கு பதில் சொல்லித் தன் நிலையைக் கூறினான். அதைக்கேட்ட அந்த இளைஞன் ''உங்கள் பிரச்னை தீர நான் ஒரு வழி கூறுகிறேன். முதலில் நீங்கள் கொண்டுள்ள அரசர்களைப் பற்றிய எண்ணத்தை மாற்றிக் கொள்ளுங்கள். அரசனாகப் பிறந்தவன் தன் பெருமையைக் காட்டிக் கொள்ளத் தான் செய்வான். ஆனால் எவ்வளவோ அரசர்கள் பண்டிதர்களையும் கவிஞர்களையும் கடவுளை வழி படுவது போல வழி படுகிறார்கள். ஒரு சிலர் அவர்களமர்ந்த பல்லக்குகளைக் கூட அவர்களே சுமந்திருக்கிறார்கள். இதெல்லாம் உங்களுக்கும் தெரிந்தது தானே'' என்றான்.

வாணிதாசன் அதை ஏற்பது போலத் தலையை அசைத்தான். அவனிடம் ஏற்பட்ட மாறுதலைக் கண்ட இளைஞன் அப்போதே ஒரு கவிதையைப் புனைந்து கூறினான். அதன் பொருள் வருமாறு:

யமுனைக் கரையில் கண்ணன் அமர்ந்து குழல் ஊதிக் கொண்டிருக்கிறான். அந்த நாதத்தில் யமுனை நதி பொங்கி எழுந்தது. இதனால் கரையோரமாக உள்ள மரங்கள் சாய்ந்தன. சில மூங்கில்களோ தங்கள் இனத்தைச் சேர்ந்த புல்லாங்குழலுக்கு இவ்வளவு சக்தியா என்று பொறாமை கொண்டன. எப்படியாவது அந்தக் குழலின் இனிய நாதத்தை அடக்க வேண்டுமென்ற முயற்சியில் அந்த மூங்கில் மரங்கள் ஆடி பலத்த சத்தத்தைக் கிளப்பின முதலில் அதுகண்டு



யமுனை சிறிது கோபம் கொண்டாலும் பிறகு அம்மூங்கில் மரங்கள் பொறாமை கொண்டுள்ளன என அறிந்து கொண்டது. அப்போது யமுனைக்கு குழலின் நாதம் மேலும் இனிமையாக இருந்தது . அதனால் யமுனை மேலும் பொங்கி மகிழ்ந்தது. இதுபோலவே சிவசந்திர மன்னரும் மகிழ்ந்து போய் காலத்திற்கு ஏற்ப நடப்பார்.

அதை கேட்ட வாணிதாசன் அந்த இளைஞனின் பெயரைக் கேட்டு அறிந்து கொண்டு ''ரத்னாகரா! இது வரை நான்தான் கவிஞர்களிலேயே சிறந்தவன் என எண்ணி இறுமாந்திருந்தேன். உங்கள் கவிதை அற்புதம்! விஷயத்தை மனதில் பதியும்படி தெளிவாகக் கூறி இருக்கிறீர்கள்'' என்று கூறி அந்த இளைஞனின் முதுகில் இலேசா



கத் தட்டினான்:

ரத்னாகரனும் ''இந்தக்கவிதை உங்களுக்காகவே இயற்றினேன்'' என்றான். வாணிதாசனும் ''அது நன்கு தெரிகிறது. என் மீது மற்ற கவிஞர்கள் பொறாமை கொண்டு ஏதேதோ சொன்னார்கள் என்ற கருத்து இதில் உள்ளது'' என்றான் ரத்னாகரனும் ''ஆனால் அந்த கங்காதரர் உங்கள் மீது பொறாமை கொண்டு உங்களை அரசர் முன் மட்டந்தட்ட ஆரம்பித்திருக்கிறார். அரசருக்கு ஏற்பட்ட ஐயத்தை பலப்படுத்தும் வகையில் நீங்கள் எதுவும் கூறாமல் நின்றீர்கள். இது தான் உங்களைப் பற்றி ஒரு கெட்ட அபிப்பிராயத்தை மன்னன் மனதில் ஏற்படுத்தத் தக்க சமயம் என்று அவர் நினைத்தார். அதனால் தான் தர்பாரில் அவ்வாறு பேசி இருக்கிறார்'' என்றான்.

வாணிதாசனும் ''நீர் சொல்வது முற்றிலும் உண்மையே. அன்று அரசர் அந்த சபையில் கடுஞ் சொற்களைப் பயன்படுத்தியதால் நான் திகைத்துப் போய் பதில் எதுவும் கூறமுடியாமல் இருந்து விட்டேன். நீர் இப்போது எனக்குக் கூறுவது என்ன? அரசரைச் சந்தித்து நீர் சொன்ன இந்த கவிதையை அவரிடம் கூற வேண்டும் என விரும்புகிறீர்களா?'' என்று கேட்டான்.

ரத்னாகரனும் ''ஆமாம். நீங்கள் மாறுவேடத்தில் போய் அரசரைக் கண்டு இந்தக்கவிதையைக் கூறுங்கள். இதைக் கேட்டதும் அரசர் ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்கி விடுவார். புல்லாங்குழலைக் கண்டு மூங்கில் மரங்கள் பொறாமை கொண்டு வேகமாக ஆடி பலத்த சத்தம் செய்தன என்ற வரிகள் அவரைச் சிந்திக்க வைக்கும். மற்ற கவிஞர்கள் உங்கள் மீது பொறாமை கொண்டுள்ளதை இக் கவிதை அவருக்கு விளக்கிவிடும்'' என்றான்.

அப்போது வாணிதாசன் சட்டென ரத்னாகரன் கூறியதை ஏற்காமல் ஏதோ சந்தேகப்பட்டவன் போல யோசிக்கலானான் அதை கவனித்த ரத்னாகரன் ''கவிஞரே! எனக்கு நீங்கள் என்ன யோசிக்கிறீர்கள் என்பது புரிகிறது. வேறொரு கவிஞன் எழுதிய கவிதையை நீங்கள் உங்களுடையது எனக் கூறி அரசரிடம் சொல்லத் தயங்குகிறீர்களா? ஆம், என் சகோதரி காவேரியின் நலனைக் கருத்தில் கொண்டு நான் இக் கவிதையைப் புனைந்தேன். இது உங்களுடையது என எண்ணி ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்றான்.

ஆனாலும் அதனைத் தன்னுடை

யது எனக் கூறிக் கொள்ள வாணி தாசனின் மனசாட்சி மறுத்தது. அவன் மௌனமாக இருப்பதைக் கண்ட ரத்னாகரன் எவ்வாறு அவனுக்கு எடுத் துச் சொல்லி அரசரிடம் அக்கவிதை யைக் கூற அனுப்பி வைப்பது என்று யோசிக்கலானான். முடிவில் அவன் தன் தலைப்பாகையை எடுத்தும், தன் முகத்தில் ஒட்ட வைத்துக் கொண் டிருந்த மீசையை அகற்றியும் தன் உண்மை உருவில் வாணிதாசனின் முன் நின்றான்.

ரத்னாகரன் வேறு யாருமல்ல வாணிதாசனின் மனைவி காவேரியே. தன் முன் ஆண் வேடத்தைக் களைந்து விட்டு நிற்கும் தன் மனைவி காவேரி யைக் கண்டு வாணிதாசன் திகைத்து நின்றான். மறு நிமிடமே ''ஆ! காவேரி!! நீயா?'' என்று ஆச்சரியப் பட்டு கேட்டான்.

காவேரியும் புன்னகை புரிந்த வாறே ''ஆம். நானேதான்'' என்று முன்பு பேசிய ஆண் குரலில் பதிலளித் தாள். பிறகு தன் இயல்பான மெல் லிய குரலில் அவள் ''நீங்கள் தர்பாரில் அவமானமடைந்து பதில் எதுவும் கூறாமல் தலைகுனிந்து கொண்டு அங் கிருந்து வெளியேறியதாக இங்கிருந்து வந்த என் தந்தையின் இரு சீடர்கள் கூறினார்கள். அதைக் கேட்டு நான் தவித்துப் போனேன். என் தந்தையின் வீட்டில் இருக்கவே பிடிக்கவில்லை. உடனே நான் கிளம்பிப் போவதாக என் தந்தையிடம் கூறினேன் அவரும் என்னோடு இங்கு வருவதாகச் சொன் னார். ஆனால் நான்தான் வரவேண் டாம் என்று தடுத்து விட்டேன். நான் காவேரியாக உங்களுக்கு எந்த



யோசனை கூறினாலும் அதை நீங்கள் ஏற்க மாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும். அதனால்தான் ஆண் வேஷத் தில் ரத்னாகரனாக உங்கள் முன்வந் தேன். இந்த என் கவிதையை நீங்கள் கொஞ்சமும் தயங்காமல் அரசரிடம் கூறுங்கள்'' என்றாள்.

முதலில் திகைத்துப் போன வாணி தாசன் அவள் கூறியதை கவனமாகக் கேட்டு அவளது யோசனையை ஏற் றுக் கொள்ள மறுத்தான். தான் எவ் வளவு எடுத்துக் கூறியும் தன் கணவன் தன் யோசனையை ஏற்காமல் இருப் பது கண்டு மிகவும் வருந்தி ''என் யோசனையை ஏற்க ஏன் மறுக்கிறீர் கள்?'' என்று கேட்டாள்.

வாணிதாசன் ஒரு நிமிடம் யோசித்து விட்டுப் பிறகு ''நான் பெண்களை மதிக்காமலும், அரசர்

களது போக்கை எதிர்த்தும், தர்பாரில் அவமானப்பட்டும் இப்போது இருந்து வருகிறேன். இந்த மூன்று எண்ணங்களையும் நீ ஒரே அடியில் வீழ்த்தி விட்டாய். இதில் வெற்றி உனக்குத்தான் அதனால் நான் உனக்குத் தலை வணங்குகிறேன்'' என்று தழதழத்த குரலில் கூறினான்.

தன் கணவனின் மனதில் மாற்றம் ஏற்பட்டது கண்டு காவேரி பூரித்துப் போனாள். அவர்களிருவரும் தம் வீட்டிற்குச் சென்றார்கள்.

மறுநாளே வாணிதாசன் மாறு வேடம் அணிந்து அரசனைக் கண்டான். அவன் காவேரி புனைந்த கவிதையைக் கூறினான். அதைக் கேட்ட சிவசந்திரனும் ''ஆமாம். என் சபையில் கண்ணனின் குழல் இசை போன்ற கவிஞர் வாணிதாசர் இருந்தார். மூங்கில் மரங்கள் போலிருந்த சில கவிஞர்களின் சதியால் நான் அவரை தர்பாரில் அவமானப்படுத்தி விட்டேன். இப்போது என் தவறை உணர்கிறேன். கவிஞரே! நீர் எனக்கும் வாணிதாசருக்கும் மகத்தான சேவை புரிந்திருக்கிறீர்கள். நீங்கள் எனக்குச் செய்யும் மற்றொரு உதவி அந்தக் கவிஞரைக் கண்டு நான் மீண்டும் அவரது அன்பைப் பெற விரும்புகிறேன் என்பதைச் சொல்வது. இதைச் செய்வீர்களா?'' என்று கேட்டான். மாறு வேடத்தில் சென்ற வாணிதாசனும் அரசரின் விருப்பத்தை நிறைவேற்றுவதாகக் கூறிப் பரிசுகளை வாங்கிக் கொண்டு சென்றான்.

அதற்குப் பின் வாணிதாசன் அரசனைக் கண்டான். சிவசந்திரனும் அவனை அன்புடன் வரவேற்று தர்பாரில் முதலிடம் அளித்தான். ஒரு நாள் அவன் மன்னனிடம் தன் மனைவி காவேரி புனைந்த கவிதையால் மீண்டும் அவனது அன்பைப் பெற முடிந்தது என்பதைக் கூறி நடந்ததை விவரமாகச் சொன்னான்.

சிவசந்திரனும் அது கேட்டு மகிழ்ந்து ''உங்கள் மனைவியும் கவிதை புனைபவளா! என் வாழ்த்துக்கள். நீங்கள் இருவருமாகச் சிறந்த இலக்கியப் படைப்புகளை அளியுங்கள். இலக்கிய தம்பதிகள் என்பது காணக் கிடைக்காத அரிய காட்சி'' எனக் கூறி வாணிதாசனுக்கும் காவேரிக்கும் பரிசுகளையும் மானியங்களையும் அளித்தான்.






# ரூபதரனின் பயணங்கள்

## 17

(பத்மமுகி தன்னை மணக்க வந்தவர்களிடம் தன் கணவனைப் போல அடுக்கி வைக்கப்பட்ட கோடாலித் தலைகளின் ஓட்டைகளின் வழியே செல்லும்படி அவர்களில் யார் அம்பு எய்கிறாரோ அவரை மணப்பதாகக் கூறினாள். கிழப்பிச்சைக்கார வேஷத்தில் வந்துள்ள தன் கணவனை அவள் அடையாளம் கண்டுகொள்ளவில்லை அக்கிழவனிடமும் அவள் தன் விருப்பத்தைக் கூறினாள். மறுநாள் தன் கணவனின் வில்லையும் எடுத்து வந்து தன் வீட்டில் கூடியவர்களிடம் தன் நிபந்தனையை அவள் கூறினாள். பிறகு)

அங்கு கூடிய கயவர்கள் ஒவ்வொருவனாக வந்து அந்த வில்லை நாணேற்ற முயன்று தோற்றுப் போனார்கள். இச்சமயத்தில் பன்றி மேய்ப்பவனும் மாட்டுக்காரனும் வெளியே சென்றார்கள். அவர்களைத் தொடர்ந்து ரூபதரனும் சென்றான்.

அவன் அவ்விருவரையும் தன்னருகே அழைத்து ''நான் சொல்வதை கவனமாகக் கேளுங்கள். உங்கள் எஜமானர் ரூபதரன் இங்கு வந்தால் அவருக்குநீங்கள் உதவி புரிவீர்களா? அவரோடு சேர்ந்து இப்போது இந்த வீட்டில் கூடியுள்ளவர்களை எதிர்ப்பீர்களா? ஒளிவு மறைவு இல்லாமல் உங்கள் அபிப்பிராயத்தை என்னிடம் தெரிவியுங்கள்'' என்று கேட்டான்.

அவர்கள் இருவரும் ரூபதரன் வந்தால் அவனுக்கு உதவுவதாகச் சத்தியம் செய்தார்கள். அப்போது ரூபதரன் ''நான்தான் ரூபதரன். நான் திரும்பி வந்தது பற்றி மகிழ்ச்சி அடையும் உங்கள் இருவரைத்தான் முதலில் பார்க்



கிறேன். கடவுளின் அருளால் என் எதிரிகளை ஒழித்த பின் உங்களுக்கு நிறையப் பரிசுகளை அளிக்கிறேன். உங்களுக்கு வீடும், நிலமும் கொடுத்துப் பாதுகாக்கிறேன். நான் ரூபதரன் இல்லையோ என்ற சந்தேகம் ஏற்பட்டால் என் காலிலுள்ள இந்த வடுவைப் பாருங்கள்'' என்று கூறித் தன் காலிலுள்ள வடுவைக்காட்டினான்.

உண்மையிலே அவன்தான் தம் எஜமானன் எனக் கண்டு அவர்கள் ஆனந்தக் கண்ணீர் வடித்தார்கள். வேட்டையின்போது ஏற்பட்ட காயம் குணமடைந்து வடுவாக மாறியது அவர்களது நினைவிற்கு வந்தது. அப்போது ரூபதரன் ''இப்போது கண்ணீர் வடித்துக்கொண்டிருக்கவோ அல்லது மகிழ்ந்து கொண்டிருக்கவோ நேரமில்லை. நான் இப்போது முதலில் உள்ளே போகிறேன். பிறகு நீங்கள் இருவரும் ஒவ்வொருவராக உள்ளே வாருங்கள். நான் வில்லைக் கேட்கும் போது அவர்கள் அதை எனக்குக் கொடுக்க மறுப்பார்கள். அப்போது பன்றி மேய்ப்பவன் அந்த வில்லை எடுத்து வந்து என்னிடம் கொடுக்க வேண்டும். அதன்பின் அங்குள்ள பெண்களை எல்லாம் அறைகளுக்குள் போய்க்கதவை மூடி உட்புறம் தாளிட்டுக் கொள்ளச் சொல்ல வேண்டும் அறைகளுக்கு வெளியே என்ன சத்தம் கேட்டாலும் அவர்கள் கதவைத் திறந்து கொண்டு வெளியே வரக் கூடாது என்று அவர்களிடம் எச்சரிக்கை செய்வது போலக் கூற வேண்டும். சுகப்பிராப்தியும் நீயும் போய் மாளிகையின் வாசல் கதவை மூடித் தாளிட்டு விட்டு வந்துவிட வேண்டும். தெரிந்ததா?'' என்றான்.

அதன்பின் ஒவ்வொருவராக அவர்கள் வீட்டிற்குள் சென்றார்கள். அப்போது விபுலயோதன் வில்லை எடுத்து அதில் நாண் ஏற்ற முயன்று கொண்டிருந்தான்.

அவனால் முடியவில்லை. அப்போது அவன் ''சீச்சீ! இந்தப் பழம் புளிக்கும்'' என்பது போல ''பூ! இதாகாவில் இந்தப் பத்மமுகியை விட்டால் மணந்து கொள்ள வேறு பெண்ணே கிடையாதா? இவளுக்காக வில்லை எடுத்து நாணேற்றி அம்பு எய்வதெல்லாம் வெட்டிவேலை இதை இனிமேலும் நான் செய்து கொண்டிருக்கமாட்டேன்'' என்றான்.

அதைக்கேட்டு துர்புத்தி ''என்ன பிதற்றுகிறாய்? இன்று இந்த வில் சமாசாரம் வேண்டாம். இன்னொரு

நாளைக்கு வைத்து கொள்வோம்'' என்றான். எல்லோரும் ''அப்படியே செய்வோம்'' என்றனர். அப்போது கிழவேடத்திலிருந்த ரூபதரன் ''ஐயன் மார்களே! அந்த வில்லை என்னிடம் கொடுக்கிறீர்களா? என் பலம் எவ் வளவு என்று பார்க்கிறேன்'' என்றான்.

அதைக்கேட்டு எல்லோரும் கோப மடைந்தார்கள். துர்புத்தியோ ''கிழவா! உன் புத்தி தடுமாறுகிறதா? இது சாதாரண வில்லல்ல, ரூபதரனின் கனமானவில். இதனை எங்களால் நாணேற்ற இன்று முடியவில்லை. ஆனால் உன்னால் வில்லை தூக்கவா வது முடி யுமா?'' என்று கேலியாகக் கேட்டான். அப்போது பத்மமுகி ''துர்புத்தி! என் மகன்அழைத்து வந்த அந்த விருந்தாளி ஏன் வில்லைப் பார்க்கக் கூடாது? அவர் வில்லில் நாணேற்றி விடுவார் என்ற பயமா?'' என்று கேட்டாள்.

விபுலயோதனோ ''அந்த பயமெல் லாம் இல்லை. எங்களால் செய்ய முடி யாததை இந்தக் கிழவனா செய்யப் போகிறான்? அப்படிச் செய்தால் எங் களுக்குத்தான்அவமானம்'' என்றான். அப்போது தீரமதி தன் தாயாரிடம் ''வில் விஷயமாக நீ ஏனம்மா வீணா கக் கவலைப்படுகிறாய்? நான் இந்த வில்லை யாருக்கு வேண்டுமானாலும் தானமாகக் கொடுப்பேன். அதை யாராலும் தடுக்க முடியாது. நீ போய் உன் வேலையைப் பார்'' என்றான்.

அதைக்கேட்டு பத்மமுகி ஆச்சரி யத்துடன் தன் மகனைப் பார்த்தாள். தன் மகனுக்கு இவ்வளவு துணிச்சலா என்று எண்ணி அவள் பெருமிதம் கொண்டாள். தன் மகன் கூறியபடியே



அவள் தன் அறைக்குச் சென்றாள். இதற்குள் பன்றி மேய்ப்பவன் வில்லை எடுத்து வந்து ரூபதரனிடம் கொடுத்தான். அதைக் கண்டு பலர் அவனை பயமுறுத்தி அவனை அடித் துப் போடப் போவதாகக் கூச்சலிட் டார்கள். அதனால் பன்றி மேய்ப்பவன் பயந்தாலும் தீரமதி கொடுத்த ஊக்கத் தால் தன் வேலையைச் செவ்வனே செய்து முடித்தான்.

இதற்குப் பின் அவன் பெண் களுள்ள இடத்திற்குப் போய் அவர் களை எல்லாம் தம் அறைகளுக்குப் போய் கதவை மூடி உட்புறம் தாளிட் டுக் கொண்டு வெளியே என்ன நடந் தாலும் வரவேண்டாமென்று எச்சரித் தான். அவர்களும் அவன் கூறியதில் உண்மை இருப்பதையும் எதோ விபரீதம் நடக்கப்போகிறது என்பதை



புரிந்து கொண்டு அவனது சொற்படியே செய்தனர். இதே சமயம் சுகப்பிராப்தி யார் கண்ணிலும் படாமல் வெளியே போய் மாளிகையின் வாசல் கதவை மூடித் தாளிட்டான்.

ரூபதரன் வில்லை எடுத்து அதை அப்படியும் இப்படியுமாகத் திருப்பிப் பார்த்தான். எல்லோரும் அவனைப் பார்த்தவாறே இருந்தனர். கிழவனுக்கு வில், அம்புகள் பற்றி ஏதோ கொஞ்சம் தெரியும் போலிருக்கிறது என்று அவர்கள் தமக்குள் பேசிக் கொண்டார்கள். இதற்குள் ரூபதரன் வில்லை வளைத்து நாண் ஏற்றி விட்டான். அதை மீட்டிப் பார்க்கவே, அது 'டங்' என ஒலித்தது. அந்த ஒலியே அங்கிருந்தோர் மனதை ஒரு கலக்கு கலக்கியது.

அப்போது தீரமதியும் ஒரு வில்லை எடுத்துக்கொண்டு வந்து ரூபதரனின் பக்கத்தில் நின்றான். ரூபதரன் தான் அணிந்திருந்த கந்தல் துணிகளைக் கழற்றி ஒரு புறமாக எறிந்தான். சட்டென வாசற்படி மீது போய் அவன் நின்று கொண்டு ''இப்போது குறி வைத்து அம்பை எய்யப் போகிறேன, இதற்குமுன் யாரும் இம்மாதிரி அம்பை எய்திருக்க மாட்டார்கள்'' என்றான்.

அந்த அம்பு துர்புத்தியை தாக்கப் போகிறது என்று யாரும் நினைக்கக் கூடவில்லை. துர்புத்தி மதுவை அருந்திக் கொண்டிருந்த போது ரூபதரன் எய்த அம்பு அவனது கழுத்தைத் துளைத்தது. மறுநிமிடம் அவன் கீழே விழுந்து உயிர் விட்டான். உடனே அங்கே கூச்சலும் குழப்பமும் ஏற்பட்டது. எல்லோரும் எழுந்து தாம் ஆயுதங்களை வைத்திருந்த இடங்களைப் பார்த்தனர். ஆனால் அவை அங்கே இருக்கவில்லை.

''கிழவா! எங்களையா தாக்குகிறாய்?'' என்று எல்லோரும் கத்திக் கொண்டு பாய்ந்து வந்தார்கள். அப்போது ரூபதரன் ''நன்றி கெட்ட நாய்களா! நான் ட்ராய்ப் போரிலிருந்து திரும்பி வரமாட்டேன் என்றுதானே எண்ணினீர்கள்? அதனால்தான் என் வீட்டில் வந்து எல்லோருமாகக்கூடிக் கொட்டமடித்து என் சொத்தையெல்லாம் கரைத்துக் கொண்டிருந்தீர்களா? நான் உயிருடன் இருக்கும்போதே என் மனைவியை மணக்க வேறு விரும்புகிறீர்களா? உங்களுக்கு கடவுள் பயமுமில்லை, மனச்சாட்சியும் இல்லை, ஆனால் இப்போது உங்களுக்கெல்லாம் நான் எமனாக வந்திருக்கிறேன்.

இதோ உங்கள் உயிர் போகப் போகிறது'' என்றான்.

அவனது வார்த்தைகளைக் கேட்டு அவர்கள் கற்சிலைகள் போலாகினர். விபுலயோதன் மட்டும் ஒருவாறு சமாளித்துக் கொண்டு ''நீ உண்மையில் ரூபதரனே. ஏனெனில் உன் பேச்சில் வீரம் இருக்கிறது. நாங்கள் பல அக்கிரமங்களைச் செய்துவிட்டோம். இதற்கெல்லாம் காரணம் இந்த துர்புத்திதான். அவன் உன் மனைவியை விவாகம் செய்து கொள்ள மட்டும் வரவில்லை. உன் மகனையும் கொன்று உன் சொத்தை எல்லாம் அபகரிக்கத் திட்டமிட்டான். நாங்கள் எல்லோரும் சேர்ந்து உனக்கு இதுவரை ஏற்பட்ட நஷ்டத்திற்கு ஈடு செய்கிறோம். பணம், ஆடு, மாடுகள் என்றெல்லாம் கொடுத்து விடுகிறோம் எங்கள் மீது கோபம் கொள்ளாதே எங்களைக் கொல்லாமல் விட்டுவிடு'' என்றான்.

ரூபதரனோ ''அடே அயோக்கியர்களே! நீங்கள் செய்த பாவங்களுக்கு கொடுக்க வேண்டியது உங்களது உயிர்களையே, உங்கள் ஒவ்வொருவரையும் நான் கொல்லத்தான் போகிறேன். நீங்கள் இங்கிருந்து தப்பி ஓடவும் முடியாது'' என்றான். அப்போது விபுலயோதன் ''நண்பர்களே! இவன் ஏதோ உளறுகிறான். எல்லோரும் வாட்களை உருவிக் கொண்டு இவனைச் சூழ்ந்து கொண்டு தாக்குங்கள். இவனால் எவ்வளவு பேர்களைக் கொல்ல முடியும் என்று பார்க்கலாம். நாம் வெளியே போய்க் குரல் கொடுத்தால் ஊர்க்காரர்கள் நமக்கு உதவ ஓடி வருவார்கள். அப்போது இவனால் என்ன செய்து விட முடியும்?'' என்றான்.

பிறகு அவன் வாளை உருவிக் கொண்டு ரூபதரன் மீது பாய்ந்தான். ஆனால் மறு விநாடியே ரூபதரன் எய்த அம்பு அவன் மார்பைத் துளைத்துக் கொண்டு சென்றது மற்றவர்களும்



ரூபதரனைத்தாக்க வந்தார்கள். சிலரை தீரமதி தன் ஈட்டியால் குத்திக் கொன்றான். பிறகு அவன் தன் தந்தையிடம் "உங்களுக்கும், பன்றி மேய்ப்பவனுக்கும், மாடு மேய்ப்பவனுக்கும் ஆயுதங்களைக் கொண்டு வந்து கொடுக்கிறேன்" என்று கூறிவிட்டுச் சென்றான்.

ரூபதரனும் "சரி. என் அம்புகள் தீருமுன் அவற்றை விரைவில் கொண்டு வந்து விடு" என்றான். தீரமதியும் ஆயுதங்களைவைத்திருந்த அறைக்குள் போய் வாள்களையும், கேடயங்களையும், ஈட்டிகளையும் கொண்டுவந்தான். அவற்றை எடுத்துக் கொண்டு அவர்கள் கதவை அடைத்துக் கொண்டு நின்றான்.

அம்புகள் எய்து தீர்ந்துபோனதும் ரூபதரன் ஈட்டியை எடுத்துக் கொண்டான். அதுவரை சிலர் இறந்து விட்டனர். அவர்களுக்குக் காலன் ஆயுத அறையிலிருந்து ஆயுதங்களை எடுத்து வந்து கொடுத்தான். அப்போது தான் தீரமதிக்குத் தான் ஆயுத அறையைப்பூட்டாமல் விட்டு வந்தது நினைவிற்கு வந்தது. தீரமதி உடனே பன்றிமேய்ப்பவனை அணுகி ஆயுத அறையின்கதவைப் பூட்டிவிட்டு வரச் சொன்னான். மறுமுறை ஆயுதங்களை எடுக்க காலன் சென்றபோது அவன் பன்றி மேய்ப்பனிடம் அகப்பட்டுக் கொண்டான்.

சண்டை அவ்வீட்டில் நடந்தது. ரூபதரன் காயப்படாமல் தப்பித் தன்னை எதிர்க்க வந்தவர்களை ஈட்டியால் குத்திக் கொன்றான். அவனுக்கு காயம் ஏற்படவில்லை. ஈட்டிகளெல்லாம் தீர்ந்த பின் தன்னை எதிர்க்க வந்தவர்களைக் கையால் குத்தி வீழ்த்தினான். அன்று தேவதைகள் ரூபதரனின் பக்கம் இருந்தன. அவனது விரோதிகள்யாவரும் விழுந்து இறந்து போனார்கள், இருவர் மட்டும் தப்பினார்கள், அவர்கள் அப்பாவிகள்.

அந்தப் பெரிய கூடத்தில் ஒரே மனித உடல்களாகக் கிடந்தன. ரூபதரன் கிழ வேலைக்காரியைக் கூப்பிட்டு "வேலைக்காரர்களிடம் முதலில் இந்த உடல்களை அப்புறப் படுத்தச்சொல். பிறகு இந்தக்கூடத்தை நன்குகழுவிவிட்டு சாம்பிராணி புகையைப்போடு" என்றான்.

அவளும் அவ்வாறே செய்தாள்.

***(அடுத்த இதழில் முடிவுறும்)***






# சாபம் விலகியது!

துருவன் கடுந்தவம் செய்வது கண்டு இந்திரன் கோபமுற்று அத்தவத்தைக் கலைக்க விரதன் என்ற தேவனை ராட்சஸனாக மாற்றி அனுப்பினான். ஒரு ராட்சஸன் துருவனைத் துன்புறுத்தி வருவது கண்டு ஒரு முனிவர் கோபமடைந்து ''விரதா! நீ என்றென்றுமே ராட்சஸனாகவே இருப்பாய்'' என்று சபித்துவிட்டார்.

ராட்சஸனாகிய விரதன் சபரி நதிக் கரைக்குப் போய் அங்கு வரும் மனிதர்களைப் பிடித்துக் கொன்று தின்று வந்தான். எல்லா விதத்திலும் அவன் ராட்சஸனாக இருந்தாலும் மூவுலகிலும் என்ன நடக்கிறது எனப் பார்க்கும் சக்தி மட்டும் அவனிடம் இருந்தது.

சபரி நதியும் கோதாவரி நதியும் சேருமிடத்தில் ஒரு முனிவரின் ஆசிரமம் இருந்தது. அதிலிருந்த சில முனி குமாரர்கள் ஒரு நாள் சமித்து சேகரித்து வரக் காட்டிற்குள் சென்றார்கள். அப்போது விரதன் அங்கு வரவே சிறுவர்கள் பயந்து ஓடி விட்டார்கள். ஆனால் பரதன் என்ற சிறுவன் ராட்சஸனிடம் அகப்பட்டுக்கொண்டான்.

ஓடிப்போன சிறுவர்கள் பரதனின் தந்தையிடம் அவரது மகன் விரதனிடம் அகப்பட்டுக் கொண்டதைக் கூறினார்கள். அவரும் ஓடிப் போய் விரதனைக் கண்டு ''என் மகனை விட்டு விடு அவனுக்கு பதிலாக என்னை வேண்டுமானால் கொன்று தின்று விடு''என்றார்.

ராட்சஸனோ ''அது முடியாது. எனக்குக் கிடைத்ததை விடமாட்டேன். உன் மகனை நாளைக்குள் எங்காவது ஒளித்துவை. அவன் ஒளிந்த இடத்தை மூன்று முறைகளுள் நான் கண்டு பிடிக்க முடியாமல் போனால் அவனைக் கொல்லாமல் விட்டு விடுகிறேன்'' என்று கூறி பரதனை அவனது தந்தையிடம் விட்டுச் சென்றான்.

பரதனின் தந்தையும் பிரம்மதேவனை ஆராதிக்கவே அவரும் அந்த

—கி. அருணா—

முனிவர் முன் தோன்றினார். பிரம்மா விடம் தன் மகன் பரதனை விரதனிட மிருந்து காக்குமாறு வேண்டவே பிரம்மாவும் பரதனை பிரம்மலோகத் திற்கு எடுத்துப் போய்தான் அமரும் தாமரையின் ஒரு இதழாக மாற்றி அதில் வைத்து விட்டார்.

மறு நாள் விரதன் பரதனின் தந்தை யைக் கண்டு ''உன் மகன் பிரம்மா வின் ஆசனமான தாமரைக்குள் ஒரு இதழாக இருப்பதைக் கண்டுபிடித்து விட்டேன்'' என்றான். அப்போது அம்முனிவர் பரதனை விட்டு விடும் படிக் கெஞ்சவே அவனும் ''சரி, இன்று நான் கண்டுபிடிக்க முடியாத இடத்தில் ஒளித்துவை பார்க்கலாம். என்று கூறிவிட்டு போனான்.

முனிவரும் பரமசிவனை ஆராதிக் கவே அவரும் முனிவரர் முன் வந் தார். முனிவர் அவரிடம் தன் மகனை விரதனிடமிருந்து காப்பாற்ற வேண் டவே பரமசிவன் பரதனைக் கைலாசத் திற்கு அழைத்துப் போய் ஒரு மலராக மாற்றினார். பார்வதி தேவி அந்த மலரை எடுத்துத் தன் தலையில் வைத் துக் கொண்டாள்.

மறுநாள் விரதன் பரதனின் தந்தை யைக் கண்டு ''உன் மகன் மலராகி பார்வதி தேவியின் கூந்தலில் இருப்ப தைக் கண்டு பிடித்து விட்டேன்'' அவனை இன்று ஒளித்துவை பார்க்க லாம்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

முனிவரும் விஷ்ணுவை ஆராதிக் கவே அவரும் முனிவர் முன் வரவே, முனிவரும் தன் மகனை விரதனிட மிருந்து காப்பாற்றுமாறு வேண்டி னார். விஷ்ணுவும் பரதனை அழைத் துக் கொண்டு வைகுண்ட லோகத்திற் குச் சென்றார் மறு நாள் விரதன் முனி வரைக் கண்டு ''எங்கே பரதன்? அவனை எங்கே ஒளித்து வைத்திருக் கிறாய்? இப்போது நான் அழைக் கிறேன். எங்கிருந்தாலும் வருவான்'' என்று கூறி ''பரதா! வா!!'' என்று கூறினான்.

பரதனும் ''உங்கள் மார்பினுள் இருக்கிறேன். இதோ வருகிறேன்'' என்று கூறி விரதனின் மார்பைப் பிளந்து கொண்டு வெளியே வந்தான். அப்போது ராட்சஸன் விரதன் இறந்து தேவனாகி சாபத்திலிருந்து விடுபட் டான். பரதனும் உயிர் தப்பினான். இது விஷ்ணுவின் மாய லீலைகளில் ஒன்று.







# அவன் உத்தமனே!

தன் முயற்சியில் சற்றும மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தில் ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச்சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர இரவில் இங்கு வந்து இப்படி முயல்கிறாயே. இதற்குத் தக்க பலன் உனக்குக் கிடைக்குமா? சில சமயங்களில் நாம் நினைப்பது நடந்து விடுகிறது. இதற்கு என்ன காரணம் என்று கூட யாராலும் சொல்ல முடியாது. இதற்கு உதாரணமாக உக்கிரமூர்த்தி என்பவனின் உபவாசம் பற்றிக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

ரங்கபுரம் என்ற ஊரில் ரங்கசாமி என்பவன் இருந்தான். அவனது வீட்டின் கொல்லைப் புறத்தில் பெரும் புதையல் இருப்பதாக எல்லோரும்

## வேதாளம் சொல்லும் கதை



பேசலானார்கள். ரங்கசாமி அது எங்கே இருக்கிறது என்று தேடிப்பார்த்தான். ஆனால் அவனுக்கு அது கிடைக்கவில்லை. ஒருமுறை அவனது வீட்டிற்கு ஒரு யோகி வந்தார். அவரிடம் ரங்கசாமி தன் வீட்டுப் புதையல் பற்றிக் கேட்கவே அவரும் ''நீ ஒரு சாதுவையோ ஒரு உத்தமனையோ உன் வீட்டிற்கு அழைத்து வந்து மூன்று நாட்கள் அவருக்கு நல்ல உணவு அளிக்க வேண்டும். நான்காவது நாள் அவர் முழு பட்டினி கிடந்து ஐந்தாவது நாள் அவர் கடப்பாரை கொண்டு உன் வீட்டின் பின் புறத்தில் எங்கு தோண்டுகிறாரோ அங்கு நீ ஆழமாக தோண்டினால் உனக்கு அந்தப் புதையல் கிடைக்கும்'' எனக் கூறினார்.

அன்று முதல் ரங்கசாமிதான் உத்தமாராக மதிப்பிட்டவரைத் தன் வீட்டிற்கு அழைத்து வந்து மூன்று நாட்கள் நல்ல உணவு கொடுத்து நான்காவது நாள் முழு உபவாசம் இருக்கச் சொல்லி ஐந்தாவது நாள் அவரிடம் கடப்பாரையால் தன் வீட்டுக் கொல்லைப் புறத்தில் அவருக்குத் தோன்றிய இடத்தில் குழி தோண்ட வேண்டுமென்று கேட்டுப்பார்த்தான். அதற்கு யாரும் இசையவில்லை. ஓரிருவரிடம் தனக்குக் கிடைக்கப் போகும் புதையலில் ஒரு பங்கு கொடுப்பதாகக் கூறியும் அவர்கள் தாம் பிறர் பணத்திற்கு ஆசைப்படுவதில்லை என்று கூறி மறுத்து விட்டார்கள். அவனது நிபந்தனைகளுக்கு கட்டுப்பட்டு ஒரு சிலர் மூன்று நாட்கள் நன்கு சாப்பிட்டு நான்காவது நாள் உபவாசம் இருந்து ஐந்தாவது நாள் கடப்பாரையால் தோண்டிய இடத்தில் ஆழத் தோண்டிப் பார்த்தும் அவனுக்குப் புதையல் கிடைக்கவில்லை.

நாளாக ஆக அவனது அழைப்பை ஏற்று அவனது வீட்டிற்கு வருவோரே இல்லாது போயினர். சில நாட்களுக்குப் பின் முன்பு வந்த அதே யோகி ரங்கசாமியின் வீட்டிற்கு வந்தார். ரங்கசாமி அவரிடம் ''சுவாமி! நீங்கள் கூறியபடி நான் நல்லவர்களைத் தேர்ந்தெடுத்து உபவாசம் இருக்க வைத்து அவர்கள் கடப்பாரையால் குத்திய இடங்களில் தோண்டிப் பார்த்தேன். ஆனால் புதையல் கிடைக்கவில்லையே'' என்று புலம்பினான்.

அப்போது யோகி ''உன் விருந்தாளியை முழு உபவாசம் இருக்கச் சொல்ல வேண்டும் என்றேனே. அவர்

கள் அப்படி இருந்தார்களா? முழு உபவாசம் என்றால் எதுவும் சாப்பிடாமலும் தண்ணீர் கூடக் குடிக்காமலும் இருப்பதுதான். அப்படி அவர்கள் பட்டினி இருந்தார்களா?'' என்று கேட்டார்.

ரங்கசாமியும் ''இல்லை. யாரும் இதுவரை இருக்கவில்லை. இனியும் யார் கிடைத்தாலும் நீங்கள் கூறியபடி உபவாசமும் இருக்கவும் மாட்டார்கள். நான் வேண்டுமானால் இந்த உபவாசத்தை மேற்கொள்கிறேனே'' என்றான். யோகியோ ''கூடாது, அப்படி நீ செய்வது சுயநலமாகும். இவ்வூரிலிருந்து பத்து மைல் தூரத்தில் மல்லிபுரம் என்னும் சிறிய நகரம் உள்ளது. அங்கு உக்கிரமூர்த்தி என்பவன் இருக்கிறான். நீ அவனை அழைத்து வந்து உபவாசம் இருக்கச் செய்தால் உன் விருப்பம் நிறைவேறும்'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

ரங்கசாமி உடனேயே மல்லிபுரத திற்குப்போய் உக்கிரமூர்த்தியின் வீட்டை எளிதில் கண்டுபிடித்து விட்டான். ஆனால் அவன் எதிர்பார்த்தது போல உக்கிரமூர்த்தி ஏழையாக இருக்கவில்லை. கப்பல் போன்ற மாளிகையில் அவன் வசித்து வந்தான். அவனிடம் பலர் பணிபுரிந்து வந்தனர். இதைக் கண்ட ரங்கசாமி ''இவ்வளவு பெரிய பணக்காரனை நான் என் வீட்டிற்கு அழைத்துப் போய் உபவாசம் இருக்கச் சொல்லி வீட்டின் பின்புறத்தில் கடப்பாரையால் ஏதாவது ஓரிடத்தில் குத்தச் சொல்ல முடியுமா? இது நடக்குமா?'' என்று தன் மனதிற்குள் எண்ணி சந்தேகப்



படலானான். ஆனால் நல்ல உயரமும் உடல்கட்டும் கொண்ட உக்கிரமூர்த்தி ரங்கசாமியை கண்டதும் தானே வந்து அவனை வரவேற்று வீட்டினுள் அழைத்துச் சென்றான்.

ரங்கசாமியை உட்கார வைத்து உபசரித்து அவன் வந்த வேலை என்ன என்று உக்கிரமூர்த்தி கேட்டான். ரங்கசாமி தயங்கித் தான் வந்த காரணத்தை கூறினான். அதைக்கேட்ட உக்கிரமூர்த்தி ''பூ! இதுதானா? நான் உன் வீட்டிற்கு வந்து மூன்று நாட்கள் சாப்பிட்டுவிட்டு நான்காவது நாள் முழுப் பட்டினி கிடந்து ஐந்தாவது நாள் உன் வீட்டின் பின்புறம் தோண்டுகிறேன். இன்று நீ இங்கே தங்கி உண்டு உறங்கு. நாளை நாம் கிளம்பலாம். அதற்குள் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்கிறேன்'' எனறான்.



ரங்கசாமியும் அன்றிரவு சாப்பிட்டு விட்டு நன்கு தூங்கினான். மறுநாள் காலை அவன் எழுந்தபோது உக்கிர மூர்த்தி பயணத்திற்குத் தயாராக இருப்பதை அறிந்தான். அவன் உக்கிரமூர்த்தியை பற்றி விசாரித்தபோது தன் பணியாட்களுக்கு அவன் நல்ல சம்பளம் கொடுக்கிறான் என்றும் ஆனால் வேலை மட்டும் கசக்கிப் பிழிந்து வாங்கி விடுவான் என்றும் அவனுக்குத் தெரிந்தது. அவன் நல்லவனே. கெட்ட பழக்கங்கள் எதுவும் இல்லாதவன். ஆயினும் சில கெட்ட குணங்கள் உள்ளனவாம்.

இதைக் கேட்ட ரங்கசாமி உக்கிர மூர்த்தியை உத்தமன் எனக் கருத முடியுமா என்று யோசித்துக் கவலைப் பட்டான். ஆயினும் யோகி அவனை அழைத்துக் கொண்டு போகச் சொன்னதால் அவன் மனம் சற்று ஆறுதலை அடைந்தது.

இதற்குள் ஒரு வேலையாள் ரங்க சாமியிடம் ''உங்கள் வேலை பற்றி எம் எஜமானர் எங்கள் எல்லோரிடமும் விரிவாகக் கூறினார். ஆனால் இந்த உபவாசத்திற்கு இவரை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்? இவர் ஒரு நாளைக்கு ஆறு வேளை சாப்பிடுபவராயிற்றே'' என்று ஆச்சரியப்பட்டு ரங்கசாமியிடம் கூறினான். ரங்கசாமியும் அதுகேட்டுத் திகைத்துப் போனான். இனி நடப்பது நடக்கட்டும், நான் தடுக்க முடியாது என எண்ணி அவன் தன் மனதைத் தேற்றிக் கொண்டான்.

பயணத்திற்கு வண்டி தயாராக இருந்தது. அதில் பல மூட்டைகள் ஏற்றப்பட்டிருந்தன. உக்கிரமூர்த்தியுடன் ஒரு சமையல்காரனும் வண்டியில் உட்கார்ந்திருந்தான். ரங்கசாமி வண்டியில் ஏறியதும் உக்கிரமூர்த்தி தன் சமையல்காரனைக் காட்டி ''நான் எங்கே போனாலும் இவனை என் கூடவே அழைத்து செல்வேன். இவன் சமையல் எனக்கு மிகவும் பிடிக்கும் அதைத்தான் நான் சாப்பிடுவேன். வேறு யார் சமைத்தாலும் எனக்குப் பிடிக்காது'' என்றான்.

வழியில் சமையல்காரன் தான் தயாரித்த உணவை உக்கிரமூர்த்திக்கும் ரங்கசாமிக்கும் படைத்தான். உக்கிர மூர்த்தி தான் சாப்பிட்டதைப்போல இரு மடங்கு சாப்பிட்டதை ரங்கசாமி கவனித்தான். அவன் அது கண்டு ஆச்சரியப்பட்டான். உணவு உண்ட பின் ஒருமணி நேரம் கழித்து உக்கிரமூர்த்தி நிறையத் தின்பண்டங்கள் சாப்பிட்ட

தையும் அவன் கண்டான்.

வண்டி சற்று தூரம் போனபோது நடந்து சென்று கொண்டிருந்த ஒரு வனை உக்கிரமூர்த்தி கூப்பிட்டு அவன் எங்கே போகிறான் என்று கேட்டான் அவனும் தன் மனைவியின் உடல் நலம் மோசமாக இருப்பதால் வைத்தி யரை அழைத்து வரப் போய்க் கொண் டிருப்பதாகக் கூறி தன்னை வண்டியில் ஏற்றிக்கொள்ளும்படி வேண்டினான் ஆனால் உக்கிரமூர்த்தி ''உன் மனைவி தானே என் மகன்மீது அபாண்டமாகத் திருட்டுக் குற்றம் சுமத்தியவள்? இப் போது அதற்கு தண்டனை அனுபவிக் கிறாள். அவள் குணமடைய நான் உதவ மாட்டேன்'' என்று கூறி அவனை வண்டியில் ஏற்றிக்கொள்ள மறுத்து விட்டான்.



இதைக்கண்டு ரங்கசாமி ஆச்சரியப் பட்டான். வண்டி மேலும் கொஞ்ச தூரம் சென்றது. ஒரு மரத்தடியே ஒரு வன் உட்கார்ந்து அழுது கொண்டிருப் பதை அவர்கள் கண்டார்கள். உக்கிர மூர்த்தி வண்டியை நிறுத்தி கீழே இறங்கி அவனிடம் போய் ''நீ சிங் காரம்தானே? இங்கே உட்கார்ந்து ஏன் அழுகிறாய்?'' என்று கேட்டான். சிங் காரமும் ''என் தந்தை இறந்து நான்கு நாட்களாகி விட்டது எனக்கு துக்கத் தில் எந்த வேலையிலும் மனதைச் செலுத்த முடியவில்லை'' என்றான்.

உக்கிரமூர்த்தியும் ''கிழவன் போய் விட்டானா? சிறுவயதில் எனக்கு வித விதமாய் தின்பண்டங்கள் கொடுத்த வனாயிற்றே'' என்று கூறி அவன் பக்கத்தில் உட்கார்ந்து அழலானான். சற்று நேரமானதும் சிங்காரம் உக்கிர மூர்த்தியைத் தேற்றினான். அப்போது உக்கிரமூர்த்தி பலமாக சிரித்து ''உன் தந்தை ஒரு போக்கிரி. என் ஒரு ஏக்கர் நிலத்தை அநியாயமாய்த் தன் வசப் படுத்திக்கொண்டவன். அவன் போனது நல்லதுதான்'' என்று கூறி விட்டு வந்து வண்டியில் ஏறிக் கொண் டான். உக்கிரமூர்த்தி இவ்வாறு கூறி யது கேட்டு ரங்கசாமி அருவருப்பே அடைந்தான். வண்டி நகர்ந்தது.

சற்று தூரம் போனதும் உக்கிர மூர்த்தி வண்டியை நிறுத்தி சமையல் காரனை உணவு கொடுக்கச் சொல்லி நன்கு சாப்பிட்டான். பிறகு அங்கே ஒரு மணி நேரம் இளைப்பாறினான் பிறகு மீண்டும் நன்கு சாப்பிட்டு விட்டுப் பயணத்தைத் தொடங்கி னான். ரங்கசாமி அது கண்டு ஆச்சரி யமே அடைந்தான். கடைசியில் வண்டி ரங்கபுரத்தை அடைந்தது



வீட்டில் இறங்கிய உக்கிரசேனன் போக்கில் மாறுதல் ஏற்பட்டது ரங்க சாமியின் மனைவியைக் கண்டு அவள் அழகானவள் என்றான். ஆனால் அவள் வீட்டை அழகாக வைத்துக் கொள்ளவில்லை என்று குறை கூறி னான். முதலில் ரங்கசாமியின் குழந்தைகளை மிகவும் நல்லவர்கள் என்று கூறிய உக்கிரமூர்த்தி சற்று நேரத் திற்குப் பின் அவர்களை விஷமம் செய்பவர்கள் என்று கடிந்து கொண் டான் ரங்கசாமிக்குப் புதையல் கிடைப்பதில் அவன் மகிழ்ச்சி அடை வதாகக் கூறிவிட்டு அதற்காகத்தான் சுகத்தையெல்லாம் விட்டு விட்டு வந் திருப்பதாகக் கூறி வருத்தப்பட்டுக் கொண்டான். அன்றையப் பொழுது கழிந்தது.

அடுத்த மூன்று நாட்களில் உக்கிர மூர்த்தி ரங்கசாமியின் வீட்டில் நன்கு சாப்பிட்டான். தினமும் ஆறுதடவை அவன் சாப்பிட்டது கண்டு வீட்டில் உள்ளவர்கள் ஆச்சரியப்பட்டனர். இவன் எப்படி ஒரு நாள் முழு உபவா சம் இருக்கப்போகிறான் என யாவரும் சந்தேகப்பட்டார்கள். ஆனால் நான் காவது நாள் ஒரு சொட்டுத் தண்ணீர் கூடக் குடிக்காமல் முழு உபவாசம் இருக்கும் முன் அவன் ரங்கசாமியிடம் ''உனக்குக் கிடைக்கப்போகும் புதை யலில் எனக்குப் பங்கு கொடுப் பாயா?'' என்று வேறு கேட்டான். ரங்க சாமியும் நாலில் ஒரு பங்கு கொடுப்ப தாகக் கூறினான்.

உபவாசம் ஆரம்பமாயிற்று. ஆனால் உக்கிரமூர்த்தி தன் சமையல் காரனிடம் தனக்கு மூன்று வேளைக் கான உணவைத் தயாரிக்கச் சொல்லி அதனை உண்டான். இதுவா உபவா சம் என ரங்கசாமி திகைத்தான்.

ரங்கசாமியோ இனி எல்லாம் கை விட்டுப் போய்விட்டது என்றே எண்ணினான். ஆனால் ஐந்தாவது நாள் உக்கிரமூர்த்தி கடப்பாரை எடுத் துப் போய் அவ்வீட்டின் பின்புறம் ஓரிடத்தில் தோண்டியபோது கடப் பாரை ஏதோ ஒரு பொருளின் மீது பட்டு 'டங்' கென்ற ஒலியைக் கிளப் பியது, அந்த இடத்தில் தோண்டிப் பார்த்ததில் ஒரு பெரிய குடம் நிறையத் தங்கக் காசுகள் கிடைத்தன.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! உக்கிரமூர்த்தி உத்த மனா? அவனிடம் நல்ல குணங் களோடு கெட்ட குணங்களும் இருந் தனவே. அவன் மூன்று நாட்கள் நன்கு சாப்பிட்டது சரி. ஆனால் நான்காவது

நாள் மூன்று வேளை சாப்பிட்டு விட்டுத்தான் முழு உபவாசம் இருந்த தாக கூறினானே. இது சரியா? அவனது ஒவ்வொரு செயலிலும் இரு மாறுபட்ட இயல்புகள் உள்ளனவே. முதலில் புகழ்ந்து விட்டுப் பிறகு இகழ் கிறானே, புதையலில் பங்கு வேறு கேட்டானே. பிறர் பொருளுக்கு ஆசைப்படுபவனா உத்தமன்? இவ் வளவு இருந்தும் அவன் தோண்டிய இடத்தில் புதையல் கிடைத்தது என் றால் அது ஏதோ தற்செயலாக ஏற் பட்டதாகத்தானே கொள்ள முடியும்? என் இந்த சந்தேகங்களைப் போக்க நீ சரியான விடைகளைத் தெரிந்து கொண்டிருந்தும் அவற்றைக் கூறா விட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''உலகில் முழுக்க முழுக்க உத்தமன் என யாரும் இல்லை உத்தமன் எனக் கூறப்படுபவன் தன் கெட்ட குணங்ளை மறைத்து விடுவ தால்தான் நல்லவனாகத் தென்படு கிறான். உக்கிரமூர்த்தி இந்த இரு வகைப்பட்ட குணங்களை வெளிப் படுத்தியே வந்தான். அவன் இரட்டை மனிதன். அதனால் தினமும் ஆறு வேளை உணவு உண்டான். அவனது நற்குணம் பிறருக்கு உதவ, கெட்ட குணம் பிறர் குறைகளை வெளிப் படையாக எடுத்துக் கூறியது. அவன் ரங்சாமிக்கு உதவியது அவனது நற் குணம் கொண்ட மனிதன். வேலைக் காரர்களிடம் கடுமையாக நடந்து, பிற ரைச் சொற்களால் கடிந்து கொண்ட தும் கெட்ட குணம் கொண்ட மற்ற மனிதன். இந்த இரண்டும் கொண்ட இரட்டை மனிதனே உக்கிரமூர்த்தி உபவாசநாளில் நல்ல மனிதன் மூன்று வேளை உணவையும் நீரையும் ஏற்க வில்லை. அந்த உபவாசத்தின் பலனா கத்தான் மறுநாள் அவன் தோண்டிய இடத்தில் புதையல் கிடைத்தது. அவனில் இருந்த இரட்டை மனிதர் களில் ஒருவன் உத்தமன். அந்த உத்த மனைத்தான் ரங்கசாமி தன் வீட்டிற்கு அழைத்து வந்து புதையலை அடைந் தான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதி லால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலிலிருந்த வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# பொறுத்துப்பார்!

வாழையூர் கடற்கரை ஓரமுள்ள கிராமம். ஒரு முறை அடித்த புயலில் வீடு வாசலை எல்லாம் இழந்த குமரன் தனக்கு உதவும்படி எல்லோரிடமும் கேட்டுப் பார்த்தான். பரம ஏழையான அவனுக்கு யாரும் உதவவில்லை. முடிவில் அவ்வூரின் வட்டிக்கடை வேலாயுதத்திடம் போய் ஆயிரம் ரூபாய் கடன் கேட்டான்.

வேலாயுதமும் ''முன்பெல்லாம் என்னைத் தெருவில் பார்த்தால் வணக்கம் செலுத்தாமல் கூடப் போய் விடுவாயே. இப்போது என் தயவு வேண்டி இருக்கிறதா?'' என்றான். குமரனும் ''ஏதோ அப்படி அப்போது நடந்தது என் தவறுதான். இப்போது எவ்வளவு வணக்கம் வேண்டுமானாலும் செலுத்துகிறேன்'' என்றான்.

வேலாயுதமும் ''சரி, இப்போது என் கால்களில் ஒருமுறை விழுந்து நமஸ்காரம் செய்தால் உனக்கு நீ கேட்ட தொகையைக் கடனாகக் கொடுக்கிறேன்'' என்றான். குமரனும் அவனது கால்களில் விழுந்து நமஸ்கரித்துவிட்டு ஆயிரம் ரூபாயை வாங்கிக்கொண்டு அங்கிருந்து வந்தான்.

அதையெல்லாம் சற்று தூரத்திலிருந்து வேடிக்கை பார்த்த குப்பன் குமரனை அணுகி ''குமரா! ஒரு ஆயிரம் ரூபாய்க்காக இப்படி விழுந்து நமஸ்காரம் போட்டாயே - வெட்கமாக இல்லை?'' என்று கேட்டான். குமரனும் ''பொறுத்துப் பார். இந்தக் கடனை என்னிடமிருந்து வசூலிக்க வேலாயுதம் எனக்கு எவ்வளவோ முறைகளில் நமஸ்காரம் செய்தாக வேண்டும்'' என்றான் சிரித்துக்கொண்டே.



# பாரதத்தின் பவளத் தீவுகள்

கருத்து: **மீராநாயர்** ◆ ஓவியர்: **கௌதம் சென்**




கேரளத்தில் கொச்சிக்கு நானூறு கிலோ மீட்டர் மேற்கே இந்தியாவின் ஒரே பவளத் தீவுகளான லட்சத்தீவுகள் உள்ளன. இவை மொத்தம் 36 தீவுகள். 1956ல் இத்தீவுகள் மத்திய அரசு ஆட்சிப் பகுதியாக ஆகியது. 1974ல் தான் இவற்றிற்கு லட்சத்தீவுகள் எனப் பெயரிடப்பட்டது. அதற்கு முன் இவை லாக்கடிவ்ஸ், அமினிடிவி, மினிக்காய்த்தீவு என்ற பெயரில் இருந்தன.

இந்த 36 தீவுகளில் பத்தில் மட்டுமே மக்கள் வாழ்கிறார்கள். இவை அமினி ஆண்ட்ராட், அகாதி பிட்ரா, சேடியட், கட்மட், கெய்பனி, கவரட்டி,கிடான் மினிக்காய் என்பனவாம். இவற்றில் முதலில் குடியேறியவர்கள் கேரளத்தைச் சேர்ந்தவர்களே கேரளத்தின் கடைசி மன்னரான சேரமான் பெருமாள் இஸ்லாமியராகி மெக்காவுக்குப் புறப்பட்டதும் அவரைத் திருப்பி அழைத்துவர கண்ணனூர் மன்னர் தம் வீரர்களை அனுப்பினார். ஆனால் அவர்கள் சென்ற கப்பல் ஒரு பாறை மீது மோதி உடைந்து போகவே அவர்கள் திரும்பி வரவேண்டியதாயிற்று.

திரும்பிய வழியில் அவர்கள் பல தீவுகளைக் கண்டார்கள். அவற்றின் அழகு பற்றி அவர்கள் தம் மன்னரிடம் கூறவே மன்னரும் ''யாராவது அந்தத் தீவில் வசிகக்க் விரும்பினால் அவருக்கு அதை சொந்தமாக்கி விடுகிறேன். அவர் அங்குள்ள நிலத்தை உழுது பயிர் செய்து பிழைக்கலாம்'' எண அறிவித்தார். அமினித்தீவில்தான் முதலில் மக்கள் குடியேறினார்கள். அதன் நீளம் 3 கி.மீ. அகலம் சுமார் 1.6 கி.மீ..

அமினித் தீவினர் ஆமை ஓடுகளையும் தென்னங் கொட்டாங்குச்சிகளையும் கொண்டு பல்விதப் பொருள்களைத் தயாரிக்கிறார்கள். வைரம், பவளம் போன்றவற்றில் உருவங்களைச் செதுக்கும் சிற்பிகள் பலர் இங்கே உள்ளனர். லட்சத் தீவுகளில் மிகவும் வெப்பமானது அகாபடித் தீவு. இது இத்தீவுகளின் மேற்கேயுள்ள கடைசித் தீவு. 1988 ல் இதற்குச் செல்ல விமானப் போக்குவரத்து ஆரம்பிக்கப்பட்டது.

அமினித் தீவின் தென் மேற்கே அண்ட்ராட் என்ற தீவு உள்ளது. இத்தீவினர் தாம் முதலில் இஸ்லாமியர்களானார்கள். 51,680 பேர்களுள்ள இத்தீவில் 94 சதவித மக்கள் இஸ்லாமியர்களே.



அண்ட்ராட்டின் படகுக்காரன்

© Amrita Bharati, Bharatiya Vidya Bhavan, 1996


கவரட்டியின் உஜ்ரா மசூதி

இஸ்லாம் மதம் எவ்வாறு லட்சத்தீவுகளில் பரவியது? ஹஜ்ரத் உபயதுல்லா என்ற துறவியின் கனவில் நபிநாயகம் தோன்றி அவரை இஸ்லாம் மதத்தைப் பரப்பத் தொலைதூரத்திலுள்ள நாடுகளுக்குச் செல்லும்படிக் கட்டளை இட்டாராம். அதன்படி அவர் கப்பலில் கிளம்பி வந்தபோது அது ஒரு புயலில் சிக்கிவிடவே அவர் ஒரு மரப்பலகையை பற்றிக்கொண்டு அமினித்தீவை அடைந்தாராம்.

முதலில் அவரால் அத்தீவினர்களை இஸ்லாம் மதத்தில் சேர்க்க முடியவில்லையாம். எனவே அவர் அண்ட்ராட், கவரட்டி, கல்பனி ஆகிய அண்டைத் தீவுகளுக்குச் சென்று இஸ்லாம் மதத்தைப் பரப்பினார். அவர் அண்ட்ராட் தீவில் இறக்க அவரது சமாதி அங்குள்ள ஜூம்மா மசூதியில் கட்டப்பட்டது.

லட்சத் தீவுகளில் அண்ட்ராட்தான் பெரிய தீவு. இது தென்னை மரங்கள் நிறைந்தது லட்சத்தீவுகளின் தலைநகர் கவரட்டித் தீவு. இது அமினித் தீவிற்கும் அண்ட்ராட் தீவிற்கும் மத்தியில் உள்ளது 6 கி.மீ நீளமும் ஒரு கி.மீ அகலமுள்ள நன்கு விரிவடைந்து வளர்ச்சியுற்றிருக்கிறது. எல்லா அரசாங்க அலுவலகங்களும் இங்கு உள்ளன.

கவரட்டித் தொழிலாளர்கள் நல்ல திறன் படைத்தவர்கள். இவர்கள் கட்டிய உஜ்ரா மசூதியே இதற்கு எடுத்துக்காட்டு. 1670 ல் கட்டப்பட்ட இதன் அடிக் கூரை மரத்தால் உருவாக்கப்பட்டு


உஜ்ரா மசூதியின் கலைத் திறன் மிக்க அடிக்கூரை

பச்சை, சிவப்பு வண்ணங்களில் மிளிர்கிறது இங்குள்ள கிணற்றின் நீர் மருந்து போல பல நோய்களைப் போக்கக் கூடியதாம்.

கவரவட்டிக்குத் தெற்கே கல்பனித்தீவு உள்ளது. இது அரேபியாவிற்குச் செல்லும் கடல் வழியில் அமைந்துள்ளது. இதனருகே மூன்று சிறிய தீவுகள் உள்ளன. இவற்றில் பிட்டி எனப்படும் தீவு பறவைகள் நிறைந்தது. இங்கு புல் கூட முளைக்காது. இப்பறவைகளின் கூச்சல் கவரட்டி தீவில் கூடக் கேட்குமாம்.

இங்குள்ள பறவைகளில் சூட்டி, நூடி என்பன குறிப்பிடத்தக்கவையாம். இவை தம் கூடுகளை மணல் பகுதியிலும், பாறை பகுதிகளிலும் கடற்கரையில் கிடைக்கும் கிளிஞ்சல் சுளையும் சிப்பிகளையும் கொண்டு அலங்கரிக்கின்றன. இவற்றின் முட்டைகள் கோழிமுட்டை போலும் கருப்பு அல்லது பழுப்பு நிறக் கோடுகளும் புள்ளிகளும் கூடி இருக்கும். அமினித் தீவினரும் அண்ட்ராட் தீவினரும் இம் முட்டைகளைப் பெரிதும் விரும்பி இங்கு வந்து எடுத்துச் சென்று கொண்டிருந்தார்கள். ஆனால் அரசாங்கம் இத்தீவைப் பறவைகளின் சரணாலயம் என அறிவித்த பின் அவர்களால் இங்கு வர முடியாது போயிற்று.

டெம் எனப்படும் இப்பறவைகள் மீனவர்களுக்கு உதவுகின்றன. அவை பெரிய மீன்கள் கடலில் உள்ள பகுதியை அவர்களுக்குக் காட்டுகின்றன. எனவே மீனவர்கள் அப் பகுதிகளில் நிறைய மீன்களைப் பிடித்து விடுகிறார்கள்.

லட்சத்தீவுகளில் மிகவும் தெற்கே உள்ள தீவு மினிக்காய். இங்கு சிறு கப்பல்கள் வந்து போக இயற்கையே வசதி செய்து தந்துள்ளது. இத்தீவைப் பிரபலக் கடல் பயணியான மார்க்கோ போலோ பெண்களின் தீவு எனக் குறிப்பிட்டுள்ளார். ஏனெனில் ஆண்கள் மாலுமிகள் எப்போதும் இத்தீவிலிருந்து படகுகளில் கடலில் தொலைதூரம் போய்விட, தீவில் பெண்கள் மட்டுமே இருப்பதை அவர் கண்டார். இப்போதும் இந்நிலையில் மாற்றம் எதுவும் இல்லை. ஆண்கள் மீன் பிடிக்கவோ, கப்பல்களில் வேலை செய்யவோ போய் விடுகிறார்கள். எனவே பெண்கள் தாம் இத்தீவில் இருந்தபடி எல்லா வேலைகளையும் செய்து வருகிறார்கள்.

மினிக்காய் வாசிகள் அணியும் ஆடைகளும் பேசும் மொழியும் மற்றத்தீவினரிடமிருந்து மாறுபட்டே உள்ளன. ஆண்கள் டீ ஷர்ட்டும் ஜீன்ஸும் அணிகிறார்கள்.



**பிட்டித் தீவின் நூடி டம்கள்**

பெண்கள் சிவப்பு நிற ஆடைகளை அணிகிறார்கள். அவற்றில் எம்ப்ராய்டரி செய்யப்பட்டிருக்கும். அவர்கள் தலையில கருப்பு அல்லது வெள்ளைத் துணியைக் கட்டிக் கொண்கிறார்கள். சிறு குழந்தைகள் கூட இவ்வாறு தலையில் துணியைக் கட்டிக் கொள்கின்றன.

மற்ற தீவுகளில் ஆண்கள் லுங்கி அணிகிறார்கள். பெண்கள் ரவிக்கை அனிந்து இடுப்பில் பாவாடை போலவும் கட்டிக் கொள்கிறார்கள். மினிக்காய் மக்கள் மஹி என்ற மொழியைப் பேசுகிறார்கள். மற்ற தீவினர் பேசும் மொழியைப் பேசுகிறார்கள். மற்ற தீவினர் பேசும் மொழி மலையாளம். இத்தீவிற்கு குஜராத்திலிருந்து மக்கள் வந்து குடியேறிய தாகக் கருதப் படுகிறது. இவர் களை 'தக்ரு' என அழைக்கிறார்கள். இது 'தாகூர்' என்ற சொல் திரிந்து இருக்கலாம். குஜராத்தில் ஒவ்வொரு வீட்டிலும் ஊஞ்சல் இருப்பது போல இங்கும் ஒவ்வொரு வீட்டிலும் உள்ளது. இவர்களது நடனமான டண்டியும் குஜராத்தின 'டாண்டிராஸ்' நடனத்தைப் போல உள்ளது.



லட்சத் தீவின் பெண்கள்

மினிக்காயின் பெண்களுக்கு,பாரதப் பெண்களைவிட அதிக சுதந்திரம் உள்ளது.



மினிக்காயின் பழங்குடி மக்களான ராவாரியின் லாவா நடனம்




# சிரித்த முகம்!

கரூரில் கண்ணப்பன் என்ற இளைஞன் இருந்தான். அவன் நன்கு உழைப்பவன். எப்போதும் சிரித்த முகத்துடன் இருப்பவன். அவனை எல்லோரும் மெச்சி வந்தார்கள்.

ஒரு நாள் அவ்வூருக்கு தர்மலிங்கம் என்ற பணக்காரர் வந்தார். அவர் தம் ஊரான திருச்சியிலிருந்து சற்று நிம்மதியாக இருக்கவே கரூருக்கு வந்தார். அமராவதி நதிக்கரையில் ஒரு பெரிய வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டு சமையல்காரனையும் பல வேலைக்காரர்களையும் நியமித்துக்கொண்டார். அவருக்கு அவ்வூர் பெரிய மனிதர்கள் சிலர். தினமும் அவரது வீட்டிற்கு அவருடன் பேசிப் பொழுது போக்க வந்தனர்.

தர்மலிங்கம் எப்போதும் ஏதோ கவலைப்படுவது கண்டு ஒரு பிரமுகர் ''இவ்வூரில் கண்ணப்பண் என்ற இளைஞன் இருக்கிறான். அவன் எப்போதும் சிரித்த முகமாய் இருப்பவன். அவனை பார்த்துக் கொண்டே இருந்தாலே உங்கள் கவலை மறைந்து விடும். அவனை வேலைக்கு வைத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினார்.

தர்மலிங்கமும் தன் சொந்த வேலைகளைச் செய்ய கண்ணப்பனைத் தன் வேலையாளாக நியமித்துக் கொண்டார். கண்ணப்பனும் தர்மலிங்கத்தின் தேவைகளை எல்லாம் கவனித்து வேலை செய்து வந்தான். அவர் குளிக்க, உடுக்க, உண்ண எல்லா உதவிகளைச் செய்தான். அவரது அறையை மிகவும் சுத்தமாக வைத்தான். தூசி என்பது அதில் எங்கும் இருக்கவில்லை. தர்மலிங்கத்தைப் பார்க்க வந்தவர்களெல்லாம் கண்ணப்பன் செய்யும் வேலைகளைப் பாராட்டினார்கள்.

இவ்வளவு இருந்தும் தர்மலிங்கத்தின் கவலை மறையவில்லை. ஒரு நாள் அவர் கண்ணப்பனிடம் ''எனக்கு நிறையப் பணம் இருந்தும் சந்தோஷ

—சுதா கிருஷ்ணசாமி—



மாக இருக்க முடியவில்லையே. எப்போதும் கஷ்டப்பட்டு வேலை செய்யும் நீ எப்படி எப்போதும் சிரித்துக் கொண்டே இருக்கிறாய்?'' என்று கேட்டார் கண்ணப்பனும் ''நான் உலகில் எதிலும் சந்தோஷத்தையே காண்கிறேன் ஆனால் உங்கள் கவலைக்குக் காரணம்தான் எனக்குத் தெரியவில்லை'' என்றான்.

அவரும் ''சிறுவனாக இருக்கையில் எனக்கு எந்தக் கவலையும் இல்லை. நூறு ரூபாயை முதலாக வைத்து வியாபாரம் செய்ய ஆரம்பித்தேன். இப்போது கோடீஸ்வரனாகி விட்டேன். என் கவலைகளை மறக்கவே என் ஊரிலிருந்து இங்கு வந்தேன். என் வியாபாரத்தை கவனிக்கப் பலர் அங்கு இருக்கிறார்கள். இங்கோ நான் தனியாக இருக்கிறேன்'' என்றார்.

கண்ணப்பனும் ''இதற்குக் கவலைப்படுவது ஏன்? நீங்கள் இல்லாமலேய உங்கள் வியாபாரத்தை மற்றவர்கள் கவனித்துக் கொள்கிறார்கள். உங்கள் செலவுக்கோ பணம் இருக்கிறது. இது போதாதா?'' என்றான் தர்மலிங்கமும். ''என் ஆட்கள் எண் முழு வேலையையும் செய்யவில்லையே'' எனவே கண்ணப்பனும் ''நீங்கள் தினமும் எனக்கு பத்து ரூபாய் சம்பளம் கொடுக்கிறீர்கள். அவர்களோ தினமும் உங்களுக்கு ஆயிரக் கணக்கான ரூபாய் கிடைக்கும்படி செய்கிறார்கள். அவர்கள் உங்களுக்குச் செய்யும் இந்தப் பணி சிறந்ததுதானே'' என்றான்.

தர்மலிங்னமும் ''ஆனால் அவர்கள் என் பக்கத்தில் இருந்து வேலை செய்யவில்லையே'' எனவே கண்ணப்பனும் ''எல்லோரும் பணத்திற்காகத் தான் வேலை செய்கிறார்கள். பணம் படைத்தவன் பணத்தைக் காட்டி வேலை வாங்குகிறான். பணமுள்ளவன் வேலை செய்வதில்லை. உங்களைப் போன்றவர்களுக்கு எங்களைப் போன்றவர்கள் வேலை செய்கிறார்கள்'' என்றான்.

அப்போது தர்மலிங்கம் ''பணத்திற்காக ஏங்கும் நீ அது கிடைக்க வேண்டுமென்ற கவலையில்தானே இருக்கவேண்டும்? அப்படி இல்லாமல் எப்போதும் எப்படி சிரித்த முகத்துடன் இருக்கிறாய்?'' என்று கேட்டார். அதற்கு கண்ணப்பன் ''இவ்வுலகில் எங்களைப் போன்றவர்களே மிக அதிகம். அந்த பலம் இருப்பதால் சந்தோஷப்படுகிறேன்'' என்றான். இது போல தர்மலிங்கம் இலக்கியங்

களைப் படிக்க முடியவில்லை என்றால் கண்ணப்பன் அவரால் பண்டிதர்களை வீட்டிற்கு வர வழைத்து அவர்களது சொற்பொழி வுகளால் அறிய முடியும் என்று கூறி னான். பணக்காரர்களுக்குத்தான் புதுப்புது வியாதிகள் வருகிறது என்று தர்மலிங்கம் கூறினால் அவர்கள் வைத்தியர்களிடம் சிகிச்சை பெற பணம் வைத்திருப்பதாகக் கண்ணப் பன் பதில் அளித்தான்.

இப்படி தர்மலிங்கம் எதைக் கேட் டாலும் அதற்கு கண்ணப்பன் பதில் கூறவே அவருக்கு கண்ணப்பனிடம் எரிச்சலே ஏற்பட்டது. அவர் தம் கவலைக்கு பதிலாக கண்ணப்பன் சந்தோஷமாக இருப்பதைக் காணச் சகியாமல் இருந்தார். அவனது சிரித்த முகத்தைப் பார்க்கும் போதெல்லாம் அவருக்குக் கோபம் வந்தது. அவர் தன் வெறுப்பு பற்றி அவ்வூர் பிரமுகர் களிடம் கூறினார்.

அதைக் கேட்ட ஒருவர் ''அப்படி யானால் கண்ணப்பனை தினமும் திட் டுங்கள். அதனால் நீங்கள் சந்தோஷம் அடையலாம். அவன் சிரிக்கவும் மாட் டான்'' என்றார். அது நல்ல யோசனை தான் என்று நினைத்து தர்மலிங்கம் அன்று முதல் காரணமில்லாமல் கண்ணப்பனைக் கண்டபடி திட்டலா னார். அப்போதும் அவன் சிரித்துக் கொண்டே இருக்க, அவர் ''இந்த வசைவுகளை கேட்க உனக்கு வெட்க மாக இல்லையா?'' என்று உறுமினார். அவன் அதை லட்சியம் செய்ய வில்லை. அவரோ அவனை நாய், பன்றி, எருமை, கழுதை என்றெல் லாம் திட்டினார்.



அவனோ ''நாய் நன்றியுள்ளது. பன்றி திருமாலின் அவதாரங்களில் ஒன்று. எருமை பொறுமைக்கு இருப் பிடம். கழுதை மூட்டை சுமந்து பணி புரிவது. எனவே இவற்றால் என்னைப் பாராட்டினீர்களேயொழி யத் திட்டவில்லை'' எனக் கூறி சிரித் தான்.

தர்மலிங்கத்திற்குக் கோபம் வந்து விட்டது. எதற்கும் இவன் மசிய வில்லையே எனக்கண்டு அவனை நான்கு பேர்களுக்கு எதிரில் திட்டி னால் அவமானம் அடைவான் என் றும் அதனால்தான் சந்தோஷம் அடையலாம் என்று அவர் நினைத் தார். அவர் மறுநாளே தன் வீட்டில் ஊர்ப் பிரமுகர்கள் வந்து கூடிய போது கண்ணப்பனைக் காரணமில் லாமல் திட்டிக் கொண்டே இருந்

தார். கண்ணப்பனோ அவற்றைக் கேட்டும் சிரித்துக் கொண்டுதான் இருந்தான்.

இதைப் பார்த்துக்கொண்டிருந்த ஒரு பிரமுகருக்குத் தர்மலிங்கத்தின் மீது கோபம் ஏற்பட்டது. அவர் கண்ணப்பனிடம் ''இப்படியெல்லாம் வசை கேட்டும் நீ ஏன் இன்னமும் இங்கே வேலை செய்கிறாய்?'' என்று கேட்டார். அவனும் ''அவர் சம்பளம் கொடுக்கிறார். அவருக்கு நான் செய்யும் வேலை பிடித்திருக்கிறது. ஏதோ கோபத்தில் இப்படித் திட்டுகிறாரே தவிர என்னை வேலையைவிட்டுப்போஎன்று இதுவரை அவர் சொல்லவில்லை. அவர் அப்படிச் சொன்னாலே நான் இங்கிருந்து போவேன்'' என்றான் சிரித்துக்கொண்டே. இன்னொருவர் அவனிடம் ''இவர் திட்டுவதெல்லாம் உனக்கு இனிக்கிறதா?'' எனக் கேட்க கண்ணப்பன் ''எனக்கு எப்படிப் பட்ட பேச்சானாலும் இனிக்கும். உலகில் பல விதமாகப் பேசத்தான் பேசுவார்கள்'' என்று சிரித்துக் கொண்டே கூறினான்.

அப்போது தர்மலிங்கம் ''இப்போதுதான் இவன் கவலை இல்லாமல் சந்தோஷமாகச் சிரித்துக் கொண்டே இருப்பதன் காரணம் புரிகிறது. கண்ணப்பன் எதிலும் நல்லதையே காண்கிறான். அவற்றில் கெட்டது இருந்தால் அதை லட்சியம் செய்வதில்லை தான் செய்வதைக் கடமை உணர்ச்சியுடன் இவன் செய்கிறான். ஏதோ பரோபகாரம் என நினைப்பதில்லை. தன்னால் முடிந்ததை எவ்விதப் பிரதிபலனும் எதிர்பாராமல் செய்கிறான். தனக்கு கிடைப்பதைக் கொண்டு திருப்தி அடைகிறான். எதையும் எதிர்பார்த்துக் கவலைப்படுவதில்லை. அதனால்தான் இவன் எப்போதும் சிரித்த முகத்துடன் இருக்கிறான் இவனைப்போல் எல்லோரும் இருக்க முடியாது போனாலும் இவனைப் போல இருக்க முயற்சியாவது செய்ய வேண்டும். அப்போது எந்தவிதமான கவலையும் இல்லாமல் இருக்கலாம்'' என்றார்.

தர்மலிங்கம் அது முதல் தன் கவலையைப் போக்க கண்ணப்பனின் முறையைப் பின்பற்றி நிம்மதி பெற்றார்.



அம்புலிமாமா

# பொன்மயமான பொழுதுகள் – 7



இது பீஜப்பூரை ஆண்ட ஒரு பெரிய மனிதரின் சமாதி. இதை நிர்மாணித்தவர் யார்? இதன் சிறப்பு என்ன?

அஸ்ஸாமில் ஒரு சிறிய கிராமத்தில் செப்டம்பர் அக்டோபர் மாதங்களில் நிலவு இல்லாத பனிகொட்டும் இரவில் சில பறவைகள் கொஞ்சம் வெளிச்சம் இருந்தாலும் வந்து விடுகின்றன. அவை அங்கு சில நாட்கள் ஆடாமல் அசையாமல் இருக்கின்றன. இந்த விசித்திர நடத்தைக்கு இது வரை யாராலும் காரணம் கூற முடியவில்லை இந்த அதிசயம் நடக்கும் கிராமத்தின் பெயர் என்ன?





இங்கு டினோஜாரில் உடல் ஐந்து பகுதிகளாக உள்ளது இவற்றைத் தனித்தனியாகக்கத்திரித்து எடுத்து யானையின் உருவம் கிடைக்கும படி வைத்துக் காட்டுங்கள்.

டில்லியில் மலர். இதழ்கள் வடிவில் கட்டப்பட்ட ஒரு கட்டடம் பிரார்த்தனைக்கூடம். ஒரு பாரசீக பிரசங்கியார் நிறுவிய புதிய மதத்தோடு இதன் தொடர்பு உடையது. அம்மதத்தின் பெயர் என்ன?

# டூத் பிரஷ்ஷால் பெயிண்ட் ஸ்ப்ரே!

ஒரு டூத் பிரஷ் சில காகிதங்கள். கொஞ்சம் உங்கள் கற்பனை இவை இருந்தால் நீங்கள் ஒரு அழகான படத்தை உருவாக்கலாம்.



சுலபமான ஒரு சிறு டிசைனைக் கத்தரியுங்கள் ஒரு ட்ராயிங் பேபர் மீது அழகாக அதை வைக்கவும். நாணயம், போல்ட் போன்ற கன மானவற்றை அந்தக்காகிதம் நகர முடியாத விதத்தில் வையுங்கள்.

ஒரு தட்டில் வண்ணம் கலந்த நீரை வைத்துக் கொண்டு டூத் பிரஷ் ஷின் நார்களை அதில் நனையுங் கள். டூத் பிரஷ்ஷைத் தலைகீழாய் ட்ராயிங் பேபர் மீது பிடித்துக் கொண்டு கட்டைவிரலால் படத்தில் காட்டியபடி டூத் பிரஷ் நார்களை பின்புறமாய் இழுத்து விட்டுவிடுங்கள். இதனால் பேபர் மீது வண்ணம் சிறுசிறு புள்ளிகளாக விழுந்து ஸ்ப்ரே ஆகும். இப்படியே பேபர் முழுவதும் வண்ணம் விழச் செய்த பின் பேபர் மீதிருந்த டிசைனை எடுத்துவிடுங்கள். அப்போது அழகான படங்கள் தெரியும்.



இதற்குத் துணிகளின் வண்ணங்களையும் போட்டோ ட்ரான்ஸ்பரண்ட் மையையும் கூட உபயோகிக்கலாம். முதலில் ஒரு வண்ணத்தில் ஆரம்பித்து பின் தேவைப்படும் வண்ணங்களைப் பயன்படுத்தலாம், பிரஷ்ஷை பேபர் மீது வைத்துக்கொள்வதால் மெல்லிய புள்ளிகள் விழுகின்றன. வண்ணங்கள் கொடுத்த பின் டிசைன் கவர்ச்சிகரமாக இருக்கும்.



# வாழ்த்து மடலுள் மரத்தை அடையுங்கள்!






1. ஒரு சதுர வண்ணக் காகிதம் எடுத்து படத்தில் காட்டியபடி கோடுகள் மடிக்கப்போடுங்கள்.

2. காகிதத்தில் கீழ்பாதியில் முக்கால் பாகம் கத்திரித்துத் தனியே எடுத்து விடுங்கள். அதன்பின் நடுவழியே கத்திரியுங்கள்.

3. பிறகு காகிதத்தின் ஒரு மூலையைச் சிறிது மடித்து அந்த மடிப்பை குறுக்காகவும் பின்னும் முன்னும் மடித்து கொண்டிருங்கள்.

4. இப்போது நீங்கள் தயாரித்த மரம் கிடைத்து விட்டது. இதை வாழ்த்து மடலின் நடுவே ஒட்டுங்கள். மரம் அடர்ந்து வளர்ந்தது போல் காட்ட மேலுள்ள கோடு மடிப்புகள் சிலவற்றை அடியில் வைத்து ஒட்டவும்.



# தாறுமாறாக உள்ள படங்கள்

*சிந்துபாத் பயணக் கதையின் படங்கள் இங்கு வரிசையாக இல்லாமல் தாறுமாறாக உள்ளன இவற்றை வரிசைப்படுத்துங்கள் பார்க்கலாம்!*





















மூன்று எளிய அடிகளில் காண்டாமிருகத்தின் படத்தை வரையுங்கள்...



## பொன்மயமான பொழுதுகள் நெ 6 ன் விடைகள்



1. கார்ல் செபக். அவர் தன் நாடகம் ஆர்.யூ. ஆரில் முதன் முதலாக ரோபோட் என்ற சொல்லைப் பயன்படுத்தினார்.

2. மாக்லென் ரயில்களுக்குச் சக்கரங்கள் இல்லை. 'மெகனடிக் லெவியேஷனின்' சுருக்கமே மாக்லென். இவை தனிச் சிறப்பான தண்டவாளங்களில் போடும் மிக சக்தி வாய்ந்த காந்த சக்தியால் தண்டவாளங்கள் மீது இழுக்கப் படுகின்றன.

3. சிவப்பு, இலைப்பச்சை, நீலம். இவற்றின் அடிப்படையில் புள்ளிகளையும் கோடுகளையும் கொண்டு தொலைக்காட்சிப் பெட்டி வண்ணப் படங்களைக் காட்டுகிறது

### ரோபோட் கணக்கு

தினமும் 18 கார்களைத் தயாரிக்கும் 9 ஆல்பா ரோபோட்கள், 27 கார்களைத் தயாரிக்கும் பீட்டா ரோபோட்கள். 9 கார்களை தயாரிக்கும் காமா ரோபோட்கள்.

4. பெஞ்சமின் பிராங்க்லின், அவர் ஆய்வின் வாயிலாகக் கண்டு பிடித்த 'லைட்னிங் கண்டக்டர்' எவ்வளவோ பேர்களின் உயிரைக் காப்பாற்றியுள்ளது.

5. சதாப்தக் கணக்கு முறைப்படி 2000வது ஆண்டு முடிவுற்றதாகும். இம் முறையில் 400 ஆல் வகுபடும் ஆண்டுகளே லீப் வருடங் கள்.

6. கப்பலில் எதுவரை சாமான்களை ஏற்றலாம் என்பதைக் காட்ட கப்பலின் வெளிப்புறம் போடப்பட்டுள்ள கோடு 'ப்ளிம்பால்லைன்'. இந்தக் கோட்டிற்கு மேல் நீர்மட்டம் இருக்கக் கூடாது.

7. பயங்கர மனிதனின் பெயர் பிராங்கன்ஸ்டீன் என்றால் தவறு. அதை உருவாக்கிய விஞ்ஞானியின் பெயரே பிராங் கன்ஸ்டீன்.




இந்திரனோடு அர்ஜுனன் இருந்தபோது ரோமசர் என்ற மகரிஷி தேவலோகத்திற்கு வந்தார். இந்திரனுக்குச்சமமாக அர்ஜுனன் உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவர் ஆச்சரியப்பட்டார். இவன் கடுத்தவம் செய்துதான் இந்த பாக்கியத்தை அடைந்திருக்க வேண்டும் என அவர் எண்ணினார்.

அவர் ஆச்சரியப் படுவதை கவனித்த இந்திரன் குறுநகை புரிந்தவாறே ''முனிசிரேஷ்டரே! இந்த அர்ஜுனன் சாதாரண மனிதனல்ல. முன்பிறப்பில் நரனென்ற மாமுனிவர். நாராயணன் என்ற மாமுனிவரோடு சேர்ந்து பல்லாயிரம் ஆண்டுகள் பத்திரிகாசிரமத்தில் இருந்து தவம் செய்தவர். நாராயணன் முன்பிறப்பல் கபில முனிவராவார். நரனும் நாராயணனும் இப்போது பூமியின் பாரத்தைக் குறைக்க அர்ஜுனனாகவும் கிருஷ்ணனாகவும் பிறந்திருக்கிறார்கள். பாதாள லோக நிவாத கவசர்கள் தேவர்களை மிகவும் துன்புறுத்தி வருகிறார்கள். அவர்களை அர்ஜுனன் ஒழிக்க வேண்டும். அதற்காகத்தான் இவனை நான் வரவழைத்தேன். நீங்கள் பூ உலகில் காம்யக வனத்திற்குப் போய் தர்மராஜரிடம் அர்ஜுனன் தேவலோகத்தில் சுகமாக இருப்பதாகக் கூறி விடுங்கள்'' என்றான். ரோமசரும் பூலோகத்திற்குச் சென்றார்.

அர்ஜுனன் தேவலோகத்திற்குப் போய் திவ்விய அஸ்திரங்களைப் பெற்றான் என வியாச முனிவர் திருதராஷ்டிரனிடம் கூறினார். உடனே அவன் சஞ்ஜயனை அழைத்து ''கேட்டாயா! அர்ஜுனன் தேவலோகம் போய் திவ்விய அஸ்திரங்களை அடைந்து விட்டானாம். துரியோதனின் போக்கால் எப்படிப்பட்ட



ஆபத்து வந்துவிட்டது பார்! இனி பாண்டவர்களுக்கே வெற்றி. என் மகன் இறந்து போவானே'' என்று புலம்பினான்.

சஞ்சயனும் ''ஆம். இதில் சந்தேக மில்லை. உமது புதல்வர்கள் துரௌ பதியைச் சபைக்கு இழுத்துவந்து அவமானப்படுத்தியதற்குப் பாண்ட வர்கள் பழிவாங்கத்தான் வாங்கு வார்கள்.'' என்று கூறினான்.

அர்ஜுனன் திரும்பி வரும் வரை பாண்டவர்கள் தீர்த்த யாத்திரை புரியலாமென தௌம்யர் கூறினார். அதற்கான ஏற்பாடுகளை தருமர் செய்து கொண்டிருந்தபோது ரோமசர் அங்கு வந்து'' நான் தேவலோகம் சென்றிருந்தேன், அங்கு அர்ஜுனன் இந்திரனோடு சரிசமமாக அமர்ந்தி ருப்பதைக் கண்டேன். அர்ஜுனன் சுகமாக இருப்பதாகக் கூறும்படி தேவேந்திரன் உங்களிடம் தெரிவிக்கச் சொன்னான். அவன் அர்ஜுனனுக்குப் பலதிவ்விய அஸ்திரங்களைக்கிடைக் கச் செய்திருக்கிறான். இப்போது அர் ஜுனன் இசையும் நாட்டியமும் கற்று வருகிறான். இப்போது நீங்கள் தீர்த்த யாத்திரை செய்யப் போவதாகத் தெரி கிறது. நானும் உங்களோடு வரு கிறேன்'' என்றார்.

அர்ஜுனன்போனகாரியம்வெற்றி அடைந்தது எனக் கண்டு தருமர் மகிழ்ந்தார். அவர் தம் கூட்டத்தின் சிலரை ஹஸ்தினாபுரத்திற்கும் மற் றும் சிலரை துருபதனின் தலைநகருக் கும் அனுப்பிவிட்டு இந்திரசேனனை யும் அவனது ஆயுத பாணிகளான சில வீரர்களையும் மட்டுமே தம்மோடு தீர்த்த யாத்திரைக்கு வரும்படிக் கூறி னார்.

பாண்டவர்கள் தீர்த்த யாத்திரை யின் போது பல புண்ணிய ஸ்தலங் களுக்குப் போய்விட்டு அகஸ்திய முனிவரின் ஆசிரமத்தை அடைந்தார் கள். அங்கு அவர்கள் அகஸ்தியரைப் பற்றி விவரமாகத் தெரிந்து கொண் டார்கள்.

முன்காலத்தில் மணிமந்தம் என்ற ஊரில் இல்வலன், வாதாபி என்ற ராட்சஸ சகோதரர்கள் இருந்தார்கள். அவர்கள் வழிப் போக்கர்களுக்கு விருந்தளிப்பதாகக்கூறி அவர்களைத் தம் வீட்டிற்கு அழைத்துச் செல்வார் கள். வாதாபி ஆடாக மாறுவான். இல் வலன் அந்த ஆட்டை வெட்டி கறி சமைத்து அவர்களுக்கு உண்ணக் கொடுப்பான். அதை அவர்கள் சாப் பிட்ட சற்று நேரத்திற்கெல்லாம்

வாதாபி அவர்களது வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வருவான். இறந்தவனை அவர்களிருவரும் விழுங்கி விடுவார்கள்.

இப்படி இருக்க அகஸ்தியர் விதர்ப்ப மன்னனின் மகளான லோபா முத்திராவை மணந்து கொண்டு அவள் கேட்ட பணத்தைத் திரட்டி வரச் சென்று கொண்டிருந்தார். அவர் சில மன்னர்களைக் கண்டு பணம் கேட்டும் கிடைக்காமல் போகவே திரும்பி வரும் வழியில் மணிமந்தத்தை அடைந்தார். அவரைக் கண்ட இல்வலன் அவரிடம் தன் வீட்டிற்கு வந்து சாப்பிட வேண்டுமென வேண்டினான்.

அகஸ்தியர் அவனது வீட்டிற்குப் போகவே அவன் ஆடாக மாறி இருந்த வாதாபியை வெட்டி அந்த மாமிசத்தைச் சமைத்து அகஸ்தியருக்குப் படைத்தான், அகஸ்தியரும் அதனை உண்டு தம் வயிற்றைத் தடவிக் கொண்டார். வழக்கத்திற்கு மாறாக வாதாபி வராதது கண்டு இல்வலன் ''வாதாபி! வெளியே வா'' என்று கத்தினான்.

அகஸ்தியரோ மீண்டும் தம் வயிற்றைத் தடவியவாறே ''அவன் எங்கே வரப் போகிறான்? அவன்தான் ஜீரணமாகி விட்டானே'' என்று கூறிச் சிரித்தார். இல்வலன் விஷயத்தைப் புரிந்து கொண்டு அவரை வணங்கி அவருக்கு நிறையப் பணம் கொடுத்து அனுப்பினான்.

அகஸ்தியரைப் பற்றி இன்னொரு கதையையும் தருமர் கேட்டுக் கொண்டார். ஒருமுறை விந்தியமலை ''நீ ஏன் உலகைச் சுற்றுகிறாய்? என்னை மட்டும் சுற்று'' என்று கர்வத்தோடு கூறியது. சூரியனோ உலகைச் சுற்றி வருவது தன் கடமை எனக் கூறினான், அப்போது விந்தியமலை ''நீ உன் கடமையை எப்படிச் செய்கிறாய் என்று பார்க்கிறேன். என்னை சுற்றி வணங்கினாலே உனக்கு வழி விடுவேன்''





கிடந்தது!

காலகேயர்கள் என்ற அரக்கர்கள் கடலில் வாழ்ந்து இரவு வேளைகளில் தரைக்குவந்து மக்களைத் துன்புறுத்தி வந்தார்கள், தேவர்கள் காலகேயர்களை அடக்கி ஒடுக்க முயன்றும் முடியாது போனதால் அகஸ்தியரிடம் போய் தம் பிரச்னையைக் கூறினார்கள். அக்ஸ்தியரும் கடல் நீர் முழுவதையும் குடித்துவிட கடல் வற்றித் தரை போலாகியது. தேவர்கள் காலகேயர்களின் இருப்பிடத்தைக் கண்டு அவர்களை அடித்துக் கொன்றார்கள். தேவர்களின் கைகளுக்கு அகப்படாத சில காலகேயர்கள் பாதாள லோகத்திற்கு ஓடிப் போனார்கள். வற்றிய கடல் பகீரதன் கங்கையை பூமிக்கு கொண்டு வந்தபோது நீரால் நிரம்பியது.

எனக்கூறி ஆகாயம் வரை உயர்ந்து சூரியனைப் போகவிடாமல் தடுத்தது.

இதனால் சூரியன் மட்டும் இல்லாமல் சந்திரன், நட்சத்திரங்கள் என்று எல்லாமே தடைபட்டு நின்றன. உலகம் இருண்டது. அப்போது தேவர்கள் அகத்தியரிடம் போய் விந்திய மலையை வழிவிடக் கூறுமாறு வேண்டினார்கள்.

அகஸ்தியரும் விந்தியமலைச் சிகரத்தைத் தம் கையால் அழுத்தவே அது தாழ்ந்து கர்வம் அழிந்து அகஸ்தியரின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டது. அகஸ்தியரும் ''நான் திரும்பி வரும் வரை நீ இப்படியே படுத்துக் கிட'' என்று கூறிவிட்டுத் தென் திசையில் சென்றார். ஆனால் அவர் திரும்பி வரவில்லை. விந்திய மலையோ அவர் வருவார் என எதிர்பார்த்துப் படுத்தே

அகஸ்திய ஆசிரமத்திலிருந்து பாண்டவர்கள் விசுவாமித்திரரின் ஆசிரமத்திற்குச் சென்றனர். அங்கிருந்து சற்றுத்தொலைவில் விபாண்டகரின் ஆசிரமத்தை பற்றிக் கேள்விப்பட்டு அங்குள்ள ரிஷ்ய சிருங்கரைப் பற்றி அவர்கள் அறிய விரும்பினார்கள். அதுவும் அவர்களுக்குத் தெரிந்தது.

அங்கு மன்னன் ரோமபாதன் தசரதனின் நண்பன். அவன் செய்த தவறால் அவனது நாட்டில் நித்தியக் கிரியைகளும் ஹோமங்களும் நடைபெறாமல் நின்று போயின. இதனால் நாட்டில் மழை பெய்யவில்லை, எங்கும் வறட்சி ஏற்பட்டது. அப்போது ரோமபாதன் தன் அமைச்சர்களின் யோசனைப்படி சில அழகிகளை விபாண்டகரின் ஆசிரமத்திற்கு அனுப்பி ரிஷ்ய சிருங்கரின் மனதைக்



கவர்ந்து அழைத்து வரச்சொன்னான். அவர்களும் அவ்வாறே செய்து ரிஷ்ய சிருங்கரை அழைத்து வந்தார்கள். நாட்டில் மழை பெய்தது, மன்னனும் தன் மகள் சாந்தாவை ரிஷ்ய சிருங்க ருக்கு மணமுடித்து வைத்தான்.

பாண்டவர்கள் அங்கிருந்து பல புனிதத் தலங்களுக்குச் சென்று மகேந்திர மலையை அடைந்தார்கள். அங்கு அகிருதவர்ணன் என்பவன் பரசு ராமரின் கதையை தருமருக்குக் கூறி னான்.

ஹைஹயவம்சத்தில் பிறந்த கார்த்தவீரியன் தத்தாத்திரேயர் அளித்த வரத்தால் ஆயிரம் கைகளை அடைந்து கர்வம் கொண்டு உலகினரைத் துன் புறுத்திவந்தான். ஒரு நாள் அவன் பரசு ராமரின் தந்தையான ஜம்தக்னி முனி வரின் ஆசிரமத்திற்குப்போய் அதை நாசப்படுத்தினான். யாகப் பசுவை அவன் பிடித்துக் கொண்டும் சென் றான். அப்போது பரசுராமர் ஆசிரமத் தில் இருக்கவில்லை. அவர் திரும்பி வந்ததும் நடந்ததை அறிந்து கார்த்த வீரியனைத் தாக்கி அவனை கொன் றார். ஆனால் கார்த்தவீரியனின் புதல் வர்கள் ஜமதக்னி முனிவர் ஆசிரமத் தில் தனியாக இருந்தபோது வந்து அவரைக் கொன்றுவிட்டுப் போய் விட்டார்கள். அதனால் கோபம் கொண்டு பரசுராமர் இருபத்தோரு முறை பூமியைச் சுற்றி வந்து க்ஷத்திரி யர்களைக் கொன்றார்.

பாண்டவர்கள் பிரபாசதீர்த்தத்தை அடைந்தபோது கிருஷ்ணர், பலராமர் முதலிய யாதவர்கள் அவர்களை வந்து பார்த்தார்கள், அவர்கள் வரப்போகும் போரில் பாண்டவர்களின் பக்கம் நின்று கௌரவர்களை எதிர்ப்பதாக வாக்களித்தார்கள். யாதவர்கள் சென்ற பின் அவர்கள் கந்தமாதனபர்வதத் திற்குப் போய் அர்ஜுனனின் வரு கையை எதிர்பார்த்து நின்றார்கள். அது புனித இடம், அங்கு அவர்கள் நரகா சுரனின் அஸ்திகளைக் கண்டார்கள்.

அப்போது அங்கு வேகமாகக் காற்று அடித்தது. தூசி உயரக் கிளம்பி எங்கும் இருள் படர்ந்தது. மழை விடாது பெய்யவே அவர்கள் ஓரிடத் தில் தங்கி இரவுப் பொழுதைக் கழித் தார்கள். காலையாகியது, ஆனால் துரௌபதியால் நடக்க முடிய வில்லை. அவளைத் தாங்கியவாறே நகுலன் நடந்தது சென்றான். அது கண்ட மற்ற பாண்டவர்கள் பெரிதும் கவலைப்பட்டனர்.

துரௌபதி நடக்க முடியாமல்

விழுந்து விடவே தருமர் கீழே உட்கார்ந்து அவளது தலையைத் தன் தொடை மீது எடுத்து வைத்துக் கொண்டார், மற்றவர்களும் ஒரு புறம் நின்றனர். வழியோ முள்ளும் கல்லுமாக இருந்தது. என்ன செய்வதெனத் திகைக்கையில் பீமன் தன் மகன் கடோத்கசனை நினைத்தான். அவனும் தன் ராட்சஸ கூட்டத்தோடு வந்து சேர்ந்தான். அவன் பாண்டவர்களையும் துரௌபதியையும் தன் தோளில் சுமந்து கொள்ள மற்ற ராட்சஸர்கள் பாண்டவர்களுடன் வந்தவர்களைத் தூக்கிக் கொண்டார்கள்.

அவர்கள் பாண்டவர்களையும் அவர்களோடு வந்தவர்களையும் இமயமலையிலுள்ள பத்திரிகாசிரமத்திற்கு கொண்டு போய் இறக்கி விட்டார்கள். யாவரும் அங்கு தங்கி குடில்களை அமைத்துக்கொண்டு காய் கனி கிழங்குகளை உண்டும் முனிவர்களை தரிசித்தும் காலம் கழிக்கலானார்கள்.

அப்போது ஒரு நாள் எங்கிருந்தோ நறுமணம் வந்தது. சற்று நேரத்தில் ஒரு மலர் பாண்டவர்களிடையே வந்து விழுந்தது. அதுதான் அந்த நறுமணத்தை அளித்த மலர். மிக அழகாய் பல இதழ்களை அடுக்கடுக்காய்க் கொண்டிருந்தது. துரௌபதி அந்த மலரைக் கையில் எடுத்தக் கொண்டு பீமனிடம் "இதை உங்கள் தமையனாரிடம் கொடுக்கிறேன். இம் மலர்ச் செடியை நாம் காம்யக வனத்தில் வளர்க்க வேண்டும். இந்தச் செடியைத் தேடிப்பிடித்து கொண்டுவாருங்கள்". என்றாள்.

பீமனும் அந்த நறுமணம் வந்த திசையில் சென்றான். செடிகொடிகளை அறுத்தும் மரங்களைப் பிடுங்கி எறிந்தும் அவன் வழி செய்து கொண்டு சென்றான். வெகு தூரம் போன பின் அவன் ஒரு வாழைத் தோட்டத்தைக் கண்டான். அதையும் நாசப்படுத்திய வாறே சற்று தூரத்திலுள்ள ஒரு குளத்தை அடைந்தான்.

பீமன் அதில் இறங்கிக் குளித்து விட்டுத் திரும்பி வாழைத் தோப்பின் வழியாகச் சென்றான். அங்கிருந்த அனுமார் வருவது பீமன்தான் எனத் தெரிந்துகொண்டார். அவர் அவன் வரும் வழியில் தன் வாலைச் சுழற்றினார். அது பயங்கர ஒலியைக் கிளப்பவே, பீமன் அனுமார் இருந்த இடத்துக்குச் சென்றான்.



# அம்புலிமாமா செய்திகள்

## யானைக்கு 'ரேடியோ காலர்'!

காட்டிலாகாவிற்குச் சொந்தமான யானைகள் காட்டில் திரியப்போய் விட்டால் அவற்றை எவ்வாறு கண்டுபிடிப்பது? யானைகளின் பின்னாலேயே சென்று கொண்டிருக்க முடியாதே! இதற்காக மேற்கு வங்காளத்தில் யானையில் காதில் ரேடியோ காலரைப் பொருத்தி ரிமோட் கண்ட்ரோல் கொண்டு யானையை மேற்பார்வை பார்க்கிறார்கள். அந்த யானை காட்டிற்குள் போய் கூட்டமாய்ச் செல்லும் காட்டு யானைகளோடு சேர்ந்து கொள்ளவே காட்டிலாகாவினருக்கு அந்த யானைகள் இருக்குமிடம் எளிதில் தெரிந்துவிடுகிறது. அதனால் அந்த யானைகளைக் காட்டிலாகாவினர் அடக்குகிறார்கள். இம்மாதிரி ஐந்து முறைகள் செய்து அவர்க்ள் வெற்றி கண்டிருக்கிறார்கள்.

## அழகான ஒட்டகம்!

பிண்டி ஹோம்லோலோ என்ற ஒட்டகம் 3,90,000 டாலர்களுக்கு (1.37 கோடி ரூபாய்கள்) விலை போயிற்று வளைகுடா நாடுகள் பலவற்றில் ஒட்டகமும் ஓட்டப் பந்தயமும் பெயர் போனது. ஓமனில் மிக வேகமாக ஓடும் ஒட்டகங்கள் உள்ளன. இவை சாதாரணமாக 800 டாலர்களுக்கே விலைபோகும். இதுவரை மிக அதிகமாக 2,60,000 டாலர்களுக்கு ஒரு ஒட்டகம் விலை போனது. ஆனால் ஐக்கிய எமரைட்ஸைச் சேர்ந்த ஒரு வியாபாரி 'பின்டி'யை 3,90,000 டாலர்கள் விலை கொடுத்து வாங்கி ஒரு 'சாதனை' புரிந்துள்ளார். இவர் அந்த ஒட்டகத்தை மிக அழகானது எனக் கூறிப் பெரும் மகிழ்ச்சி கொள்கிறார்.

## இந்திய ஓவியங்களுக்கு மிக உயர்ந்த விலை!

லண்டனில் புகழ் பெற்ற ஏலக்கடையான சௌத் பின் ஆக்ஷன் கம்பெனி அக்டோபர் 8ல் சுமார் இந்திய ஓவியர்களின் 150 படங்களை ஏலம் போட்டது. கேரளத்தின் ரவி வர்மா முதல் இக்கால ஹுசைனின் ஓவியங்கள் வரை ஏலம் விடப்பட்டன. இதில் ரவிவர்மாவின் படம் அதிக விலைக் கும் போயிற்று. அவரது ஓவியம் மட்டும் அன்று ரூபாய்களுக்கு (14,16,800) விலை போயிற்று. அன்று ஏலத்தில் விடப்பட்ட மற்ற ஓவியர்களின் ஏழு படங்கள் மொத்தம் 11,20,200 ரூபாய்களுக்கு விலை போயின. கவியரசர் ரவீந்திரர் வரைந்த ஓவியம் 9,13,040 ரூபாய்களுக்கு விலைபோயின. இவற்றை வாங்கியவர்களில் பலர் அந் நாட்டில் வசிக்கும் இந்தியர்களே.

## 'மியூக்' போலீஸ்காரர்!

கலிபோர்னியா ஷான்ஜோன் காவல் துறையில் 'ஆபீசர் மீயூக்' என்ற ராபோட் போலீஸ்காரர் இருக்கிறார். இவர் மற்ற காவல் அதிகாரிகளைப் போலவே அக்டோபர் முதல் தேதியன்று பதவி ஏற்றார். 'மியூக்' தெருக்களில் திரிந்து குற்றங்கள் நடக்காமல் தடுப்பது எப்படி என்று மக்களுக்கு எடுத்துச் சொல்கிறாராம்.



# வில்வமரம்

நம் நாட்டில் புனிதமாகக் கருதப்படும் மரங்களில் வில்வ மரம் முக்கிய மானது. சிவபிரானை பூசிக்க வில்வ இலை களைப் பயன்படுத்துகிறார்கள். இந்த இலை மிருதுவாக இருக்கும் சிவன் கோவில்களிலும் பூங்காக்களிலும் இம் மரங்களை வளர்க்கிறார்கள். இவை தாமாகவே கூட வளரக் கூடியவை. வில் வக் காய்களையும் புனிதமாகவே கருது கிறார்கள் வளமைக்கும் செழுமைக்கும் இதனைச் சின்னமாகக் கருதுகிறார்கள். இம் மரத்தை நம் நாட்டில் எங்கும் காணலாம்.

எப்போதும் பசுமையாகத் தெனபடும் வில்வ மரம் 10 மீட்டர் உயரம்வரை வளர்கிறது. மரத்தின் பட்டை அழகாயும் முட்கள் நிறைந்ததாயும் இருக்கும். இதன் கிளைகள் முண்டு முண்டாக இருக்கும். நேராக இராமல் வளைந்து வளைந்து இருக்கும். குளிர் காலத்தில் இதன் இலை கள் உதிரும். வசந்த காலத்தில் துளிர் விடும். பச்சை வெள்ளை நிறங்களில் இதன் மலர்கள் இருக்கும். நறுமணமும் கொண்டி ருக்கும்.

காய்களினுள்ளிருக்கும் சதைப்பற்றை சாப்பிடலாம். வெல்லமோ சர்க்கரையோ கலந்து ஷர்பத் தயாரிக்கலாம். வில்வ இலை, காய், பட்டை, வேர் இவையாவும் மருந்திற்குப் பயன்படுகின்றன. இந்த மரம் எலுமிச்சை, கொளுமிச்சை மரவகை களைச் சேர்ந்தது.



# ஆஸ்திகர்

ஆஸ்திகர் ஜரத்கார முனிவருக்கும் மானசா தேவிக்கும் பிறந்தவர். சியவனரின் சீடர். மானசாதேவி கஸ்யபரின் புதல்வி. பாம்புகளை அடக்கும் சக்தி பெற்ற வள். ஒரு முறை பாம்பினத்திற்கே பெருத்த ஆபத்து வந்தது.

பாண்டவரின் பேரன் பரீட்சித்து. ஒரு முறை காட்டில் வேட்டையாடப் போய் ஒரு மானைத் துரத்திக் கொண்டு சென்றான். மான் எங்கோ ஓடிவிட்டது. அது பற்றி அவன் தவத்தில் ஆழ்ந்திருந்த சமீக முனிவரிடம் கேட்டான். அவர் பதில் சொல்லாததால் ஆத்திரம் கொண்டு அங்கே கிடந்த ஒரு செத்த பாம்பை எடுத்து அவர் கழுத்தில் மாலையாக போட்டுச் சென்றான். இதை அறிந்த சமீகரரின் மகன் சிருங்கி ''பரீட்சித் துவை ஏழு நாட்களுள் ஒரு பாம்பு தீண்டி சாகடிக்கும்'' எனச் சபித்தார்.

அதை கேள்வியுற்ற பரீட்சித்து பாம்பு வரமுடியாத இடமாக ஒன்றை அமைத்து அதில் இருக்கலானான். ஏழாவது நாளில் தட்சகன் என்ற பாம்பு ஒரு புழுவாக மாறி பரீட்சித்து சாப்பிடும் பழத்தில் புகுந்து கொண்டது. பரீட்சித்து அப்பழத்தை எடுத்து உரித்தபோது அதிலிருந்த புழு தட்சகனாகி அவனைத் தீண்டியது. அதனால் பரீட்சித்து இறந்து போனான்.

தட்சகன் மீது கோபம் கொண்டு பரீட் சித்துவின் மகன் ஜெனமே ஜெயன் சர்ப்ப யாகம் செய்து உலகிலுள்ள பாம்புகளை எல்லாம் யாகத் தீயில் வந்து விழச் செய் தான். இதைக் கண்டு தட்சகன் பயந்து தேவ லோகம் போய் இந்திரனின் சிம்மாசனத் தைச் சுற்றிக் கொண்டு தன்னைக் காப் பாற்றும்படி வேண்டினான். ஆனால் ஜெனமே ஜெயனின் யாகத்தின் மந்திர பலம் இந்திரனையும் தட்சகனையும் சிம்மா சனத்தோடு சேர்த்து தூக்கிக்கொண்டு யாகத் தீயை நோக்கி இழுத்தது.

இதைக்கண்டு தேவர்கள் நடுநடுங்கி மானசா தேவியிடம் போய் இந்திரனையும் தட்சகனையும்காப்பாற்றும்படி வேண்டினார் கள். அவளும் தன் மகன் ஆஸ்திகரை ஜெனமே ஜெயனிடம் அனுப்பினாள்.

ஆஸ்திகர் யாகசாலைக்குப் போய் ஜெனமே ஜெயனிடம் பேசவே, மன்னனும் மகிழ்ந்து ''உனக்கு என்ன வேண்டுமோ கேள், கொடுக்கிறேன்'' என்றான். ஆஸ்தி கரும் 'உடனே அந்த யாகத்தை நிறுத்த வேண்டும்'' எனக் கோரினான். ஜெனமே ஜெயனும் தன் வாக்கைக் காக்க யாகத்தை உடனேயே நிறுத்தி விட்டான். இவ்வாறு இந்திரனும் தட்சகனும் உலகில் எஞ்சி இருந்த பாம்புகளும் ஆஸ்திகரால் காப்பாற்றப்பட்டனர்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. 'வந்தே மாதரம்' பாடலை இயற்றியவர் யார்?
2. உலகிலேயே மிகச் சிறிய சுதந்திர நாடு எது?
3. சூரியனைச் சுற்றி எவ்வளவு கிரகங்கள் சுழல்கின்றன?
4. இங்கிலாந்தையும் ஐரோப்பாவையும் பிரிக்கும் கால்வாயின் பெயர் என்ன?
5. இந்தியாவின் தேசிய மலர் எது?
6. 'மிக்கி மௌஸ்', 'டொனால்ட் டக்' ஆகியவற்றைப் படைத்துக் கொடுத்தவர் யார்?
7. அயல்நாட்டு சரக்குகளின் மீது விதிக்கப்படும் வரியின் பெயர் என்ன?
8. அமெரிக்கக் கரன்சியின் பெயர் என்ன?
9. நர்ஸ் தொழிலை ஆரம்பித்தவர் யார்?
10. இந்திய நாடாளுமன்றத்தின் இரு சபைகள் யாவை?
11. சதுரங்க ஆட்டப் பலகையில் எவ்வளவு கட்டங்கள் உள்ளன?
12. சூரியக் கிரணத்திலிருந்து கிடைக்கும் விடமின் எது?
13. தங்கம் அதிகமாகக் கிடைக்கும் நாடு எது?
14. வெள்ளைக் கொடியை எப்போது உபயோகிக்கிறார்கள்?
15. சூரிய மண்டத்தில் மிகப் பெரிய கிரகம் எது?
16. 'நைட்டிங்கேல் ஆஃப் இந்தியா' என்பவர் யார்?
17. மிருகங்களில் மிக உயரமானது எது?
18. ஒலிம்பிக் விளையாட்டுகள் எவ்வளவு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடக்கின்றன?

## விடைகள்

1. பங்கிம் சந்திர சட்டர்ஜீ.
2. வாடிகன் நகரம்.
3. ஒன்பது.
4. இங்கிலீஷ் கால்வாய்.
5. தாமரை.
6. வால்ட் டிஸ்னி.
7. கஸ்டம்ஸ் டியூட்டி.
8. டாலர்.
9. ப்ளாரன்ஸ் நைட்டிங்கேல்.
10. லோக்சபா, ராஜ்யசபா.
11. 64. கருப்பு 32. வெள்ளை 32.
12. 'டி' விடமின்.
13. தென்னாப்பிரிக்கா.
14. சமாதானம் செய்துகொள்ள.
15. வியாழ கிரகம்.
16. சரோஜினி நாயுடு.
17. ஜிராப்.
18. நான்கு ஆண்டுகள்.

# ஒரு ஜோடி செருப்பு கால்ரூபாய்!

கந்தன் தன் ஊரிலிருந்து கிளம்பி அடுத்த ஊருக்குச் சில மளிகை சாமான்களோடு தன் காலுக்கு செருப்பும் வாங்கச் சென்றான். அந்த ஊரில் ஒரு கோவிலுக்கருகே ஒருவன் உட்கார்ந்திருப்பதையும் அவன் முன் வரிசையாகச் செருப்பகள் வைக்கப்பட்டிருந்ததையும் கண்டான். அவன் அங்கே நின்று பார்த்தபோது அருகிலிருந்த பலகையில் 'ஒரு ஜோடி செருப்பு கால் ரூபாய்' என்று எழுதப்பட்டிருந்தது.

அதைப்படித்த கந்தன் இவ்வளவு மலிவாகச் செருப்பு கிடைக்கறதே என்று எண்ணி மகிழ்ந்து ஒரு ஜதைச் செருப்பைத் தன் கால்களில் அணிந்து கொண்டு கால் ரூபாயை எடுத்து அங்கு உட்கார்ந்திருந்தவனிடம் கொடுத்தான். அவனோ ''யாரப்பா நீ? பட்டப்பகலில் செருப்பு திருட வந்து விட்டாயா! இது உன் செருப்பு அல்ல அதோவரும் மாணிக்கவேலரின் செருப்பு. நீ ஒன்றும் இங்கே உன் செருப்பை விட்டு விட்டுப் போகவில்லை'' என்றான் கோபமாக.

இதற்குள் மாணிக்கவேலரே அங்கு வந்து விட்டார். அவர் நடந்ததைக் கேட்டு அறிந்து. ''தம்பி! இது செருப்பு விற்கும் கடை அல்ல. கோவிலுக்கு வருபவர்களின் செருப்புகளை பத்திரமாகப் பார்த்துக் கொள்ளக் கட்டணம் வசூலிக்கும் இடம்'' என்றார்.

கந்தனும் ''பலகையில் ஒரு ஜோடி செருப்புகால் ரூபாய் என்று எழுதி இருந்ததால் இதைச் செருப்புக் கடை என்று எண்ணிவிட்டேன். சற்று விளக்கமாக ஒரு ஜோடி செருப்பிற்குக் கட்டணம் கால் ரூபாய் என்று எழுதி இருந்தால் இதை செருப்புக் கடை என்று எண்ணி இருக்க மாட்டேன்'' என்றான்.

மாணிக்கவேலரும் அதுவும் சரிதான் எனக் கூறிச் சிரித்தார்.





# இரு தொப்பிகள்!

வண்டியூர் விசு தன் முன்னோர் விட்டுப் போனபத்து ஏகர் நிலத்தைக் குத்தகைக்கு விட்டு சுக வாழ்வு வாழ்ந்து வந்தான். தனிக்கட்டையான அவன் சண்பகத்தை மணந்து கொண்டு ஆனந்தமாகக் காலம் கழிக்கலானான். அவர்கள் அன்னியோன்னிய தம்பதிகள், எவ்விதச் சண்டை சச்சரவும் இல்லாமல் அவர்களது குடும்ப வாழ்க்கை நடந்து வந்தது. இப்படியாக ஐந்து வருடங்கள் கழிந்தன.

அவர்களது வீட்டிற்கு அடுத்த வீட்டிற்கு அகிலாண்டம் என்பவள் குடி வந்தாள். அவளுக்கு விசுவும் சண்பகமும் சண்டை சச்சரவே இல்லாமல் குடித்தனம் செய்வது பொறாமையை உண்டாக்கியது. ஏனெனில் அவள் தன் கணவனிடம் எதற்கெடுத்தாலும் சண்டை போடுபவள். அவளது கணவனும் அவளது வாய்க்கு பயந்து அவளுக்கு அடங்கி வந்தான்.

அகிலாண்டம் விசுவிற்கும் சண்பகத்திற்குமிடையே எப்படி சண்டை மூட்டி விடுவது என்று யோசித்தாள். முடிவில் அவள் சண்பகத்தின் மனதில் படிய அவளது கணவனைப் பற்றி எப்போதும் குறை கூறலானாள். ''சண்பகம்! உன் கணவன் அலைந்து திரிந்து வேலை செய்தால் இன்னமும் நாலு காசு சம்பாதிக்கலாமே! உனக்கு நிறைய தங்க நகைகளும், பட்டுப் புடைவைகளும் வாங்கிக் கொடுக்கலாமே. இதே ஊரில் இரண்டு வீடுகள் வாங்கிப் போடலாமே'' என்றெல்லாம் அடிக்கடி அவள் சண்பகத்திடம் கூறி வந்தாள்.

கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும் என்பது போல மெதுவாக சண்பகத்திற்கும் தன் கணவன் மீதிருந்த மதிப்பு குறையலாயிற்று. அகிலாண்டம் கூறுவது சரிதானே. விசு சாப்பிட்டுச் சாப்பிட்டுப் படுத்துக் குறட்டை விட்டுத் தானே தூங்குகிறான்! நான்கு இடங்களுக்குப் போய்

– சங்கர சுவாமிநாதன் –



வியாபாரம் செய்தால் நிறையப் பணம் கிடைக்குமே.

ஒரு நாளிரவு விசு படுத்துக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான. அவனருகே படுத்திருந்த சண்பகத்திற்கு இதனால் தூக்கம் வராமல் எரிச்சலே ஏற்பட்டது. அவள் தன் கணவனை எழுப்பி ''உங்கள் குறட்டை சத்தம் என்னைத் தூங்க விடவில்லை. இந்த சத்தத்தில் என்னால் இங்கே தூங்க முடியாது. நான் வீட்டை விட்டு எங்கேயாவது போகிறேன்'' என்று கூறினாள்.

விசுவோ ''இந்த நடுராத்திரியில் பெண்ணாகிய நீ எங்கே போவாய்? நானே போகிறேன்'' என்று கூறி வீட்டை விட்டு வெளியே சென்றான். அன்று அமாவாசை அந்த கும்மிருட்டில் தன் கால் போன திக்கில் சென்றான். அவன் அவ்வூருக்கு வெளியே உள்ள காட்டில் தான் இருந்தான். சற்று தூரத்தில் ஒரு மரத்தடியே ஒரு விளக்கு எரிய அதைச்சுற்றி நான்கு உருவங்கள் இருப்பதைக் கண்டு அம்மரத்தை நோக்கி நடந்தான்.

அவன் அந்த மரத்தை அடைந்த போதுதான் அந்த நான்கு உருவங்களும் நான்கு பிசாசுகள் என்று தெரிந்து கொண்டான். அவன் சட்டென அந்த மரத்தின் பின்னால் படுத்து அவை என்ன பேசுகின்றன என்று கேட்கலானான்.

அப்பிசாசுகளின்தலைமைப்பிசாசு ''இன்று நம் எல்லோரையும் சிரிக்க வைக்கறவனுக்கு ஒரு அற்புத பரிசு அளிப்பேன்'' என்றது உடனே ஒரு பிசாசு தான் மற்றவர்களைச் சிரிக்க வைப்பதாகக் கூறிக் கீச்சுக் குரலில் உரக்கப் பாடியது இன்னொரு பிசாசு பாடிக்கொண்டே ஒற்றைக் காலால் ஆடியது வேறொரு பிசாசு சிரிப்பு மூட்டும் கதை என்று ஒன்றைக் கூறியது. இதற்கெல்லாம் எந்தப்பிசாசும் சிரிக்கவில்லை.

இதையெல்லாம் மரத்தின் பின் படுத்திருந்த விசு கேட்டவாறே கண்ணை மூடினான். மறு நிமிடமே அவன் மெய் மறந்து தூங்கி உரக்க குறட்டை விடலானான். அந்த குறட்டை சத்தத்தைக் கேட்டு நான்கு பிசாசுகளும் விழுந்து விழுந்து சிரித்தன. அவை அந்த சத்தம் வந்த திசையைப்பார்த்தன. அங்கு படுத்திருக்கும் விசுவைக் கண்டு சத்தப்படுத்தாமல் அவனருகே போய் நின்றன.

விசு குறட்டை விடும்போது அவனது தொந்தி உயர்ந்து தாழ்வதும்.

அவனது மீசை துடிப்பதும் கண்டு அவை சிரித்தன. அந்தச்சிரிப்பால் விசுவின் தூக்கம் கலைந்தது. அவன் கண் விழித்துப் பார்த்த போது தலைமைப் பிசாசு அவனிடம் ''நாங்கள் ஒவ்வொரு அமாவாசையன்றும் இங்கு வேடிக்கையாகப் பேசி பொழுதைக் கழித்துவிட்டுச் செல்வது வழக்கம். இம்முறை எங்களைச் சிரிக்க வைப்பவனுக்கு ஒரு பரிசு தருவதாகக் கூறி இருந்தேன். நீ எங்களைச் சிரிக்க வைத்தாய். எனவே அந்தப் பரிசு உனக்குத்தான்'' என்று கூறி அவன் தலையில் ஒரு தொப்பியை மாட்டியது. மறு நிமிடமே அந்த நான்கு பிசாசுகளும் மறைந்து போயின.

விசுவிற்கு அவற்றின் நடத்தை விசித்திரமாகத் தோன்றியது. அவை கொடுத்த தொப்பி ஒரு பரிசா என்று எண்ணி ஆச்சரியப்பட்டான். அப்போது விசுவிற்குத் தன் வீட்டின் நினைவு வரவே அவன் அங்கிருந்து வீட்டிற்கு வந்தான். அப்போது நன்றாக விடிந்து விட்டது. சண்பகம் வாசலில் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். அவள் தன் கணவனைக் கண்டதும் முன் தினம் இரவில் தான் பேசியதற்காக மன்னிப்புக் கேட்க அப்போது எண்ணினாள்.

அப்போது விசு ''நீ என்னிடம் மன்னிப்பா கேட்க நினைக்கிறாய்? கணவன் மனைவி ஒருவர் மற்றவரிடம் மன்னிப்பு கேட்பது சரியல்ல. குடும்பம் என்றால் இப்படித்தான் ஊடல், பிணக்கு என்று இருக்கும். அதை எல்லாம் விட்டுத் தள்ளு'' என்றான். அதைக் கேட்ட சண்பகம் ''நான் வாய்திறந்து ஒரு வார்த்தை கூடக் கூற



வில்லையே எப்படி நான் நினைத்தது உங்களுக்குத் தெரிந்தது!'' என்று ஆச்சரியத்துடன் கேட்டாள்.

விசுவும் ''ஆமாம். எனக்கு எப்படி உன் மனதில் நீ நினைத்தது தெரிந்தது என்று நானும் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்றான். அப்போது அவனைக் கூர்ந்து கவனித்த சண்பகம் ''அதென்ன தலையில் ஒரு கருப்புத் தொப்பி?'' என்று கேட்கவே விசுவும் அதைக் கையில் எடுத்துப் பார்த்தான். அப்போது சண்பகமே மனதில் நினைப்பது அவனுக்குத் தெரியவில்லை. அப்போதுதான் அவனுக்கு அந்த தொப்பியின் சக்தி என்ன என்று புரிந்தது.

அவன் காட்டில் நடந்ததை எல்லாம் சண்பகத்திடம் கூறினான். அவளும் சற்று யோசித்துவிட்டு



''இந்த சக்தி வாய்ந்த தொப்பியால் நமக்கு எவ்விதப் பயனும் இல்லை. இதனை நம் நாட்டு மன்னருக்குக் கொடுத்தால் அவர் இதைக் கொண்டு தம் நண்பர் யார் எதிரி யார் என்று உடனே கண்டுபிடிப்பார். இதனால் நாட்டிற்கு நன்மை ஏற்படும் அதனால் இதனை நீங்களே வைத்துக் கொள்ளாமல் இந்நாட்டு மன்னரிடம் கொடுத்து விடுங்கள்'' என் றாள்.

விசுவும் அவனது நாட்டுப்பற்றைப் பாராட்டி அவள் சொன்ன படியே செய்வதாகவும் கூறினான். அவன் உடனே தலைநகருக்குப் போய் மன்னரைக் கண்டான். அவரிடம் தனக்கு அந்தத் தொப்பி கிடைத்த விதத்தையும் அதன் சக்தியையும் கூறி அவருக்கு காணிக்கையாகச் சமர்ப்பித்தான். மன்னரும் அவனது நாட்டுப் பற்றையும் ராஜபக்தியையும் பாராட்டி ஒரு பைநிறையத் தங்க நாணயங்களைப் போட்டுப் பரிசாகக் கொடுத்தனுப்பினார்.

விசு ஊருக்கு வந்து மன்னர் கொடுத்த பரிசைக் காட்டினான். சண்பகமும் ''இதை முதலாக வைத்து வியாபாரம் ஆரம்பியுங்கள். அப்போது நீங்கள் படுத்துக் குறட்டை விட நேரமும் இராது. அங்கும் இங்கும் அலைவதால் உங்கள் தொந்தியும் கரைந்து விடும்'' என்றாள். விசுவும் அந்த யோசனையை ஏற்று வியாபாரம் செய்ய ஆரம்பித்தான்.

தொப்பி விவகாரம் நடந்தபோது அகிலாண்டம் ஊரில் இருக்கவில்லை. பதினைந்து நாட்களுக்குப் பின் திரும்பி வந்த அவள் விசுவும் சண்பகமும் மேலும் நல்ல நிலையை அடைந்தது கண்டு அவள் பொருமினாள். அவள் சண்பகத்திடம் மெதுவாகப் பேச்சுக் கொடுத்து நடந்ததைத் தெரிந்து கொண்டாள்.

அகிலாண்டம் அன்றிரவே தன் கணவன் திருவேங்கடத்திடம் ''நீங்கள் வரும் அமாவசையன்று காட்டிற்குப் போய் பிசாசுகளைக் கண்டு அவற்றிடம் நயமாகப் பேசி சக்தி வாய்ந்த தொப்பி ஒன்றைக் கேட்டு வாங்கி வர வேண்டும். அந்தத் தொப்பிக்கு நீங்கள் அதை அணிந்தால் உங்களை யார் கண்களுக்கும் தெரியாமல் போகும்படியான சக்தி இருக்க வேண்டும். அது கிடைத்ததும் நீங்கள் அதை அணிந்து கொண்டு தலை நகருக்குப் போய் அரண்மனைப் பொக்கிஷத்தில் உள்ளதை எல்லாம் மூட்டை கட்டி எடுத்து வந்து விடவேண்டும். அது

மட்டுமல்ல ராணியின் அந்தப்புரத்திற்குப் போய் அவள் அணிந்து கொள்ளும் ஒன்பது வடநவரத்தின மாலையையும் கொண்டு வரவேண்டும்'' என்று கூறினாள்.

திருவேங்கடமும் தயங்கியவாறே ''இதையெல்லாம் என்னால் செய்ய முடியுமா? அகப்பட்டுக்கொண்டால் என் கதி என்ன ஆகும்?'' எனவே அகிலாண்டமும் ''முயன்றால் முடியாதது என்று எதுவுமே இல்லை'' என்று கூறி அமாவாசையன்று தன் கணவனைக் காட்டிற்கு அனுப்பினாள். அவனும் தன் மனைவி கூறிய அடையாளங்களைக் கொண்டு பிசாசுகள் கூடும் மரத்தைக் கண்டு பிடித்து அதன் பின்னால் மறைந்து நின்றான். பிசாசுகள் வந்தன. அவற்றைக் கண்டு திருவேங்கடம் அலறினான்.

தலைமைப் பிசாசு அவனைக் கண்டுபிடித்து பலமாகப் பற்றி ''அடே! யார் நீ? எங்கள் விஷயத்தில் ஏன் குறுக்கிடுகிறாய்? இங்கே எதற்கு வந்தாய்?'' என்று கேட்டது. திருவேங்கடமும் ''நான் உங்களிடம் பேசி சிரிக்க வைத்து ஒரு மந்திரத் தொப்பி வாங்கிப்போக வந்தேன்'' என்றான். பிசாசும் ''ஓ! தொப்பியா வேண்டும்? உன்னைப் பார்த்தாலே ஒரு கோமாளி போல இருக்கிறதே. இன்னும் தொப்பி வேறு வைத்தால் பார்க்க வேடிக்கையாக இருக்கும். சரி உனக்கு எப்படிப்பட்ட தொப்பி வேண்டும்?'' என்று கேட்டது. எல்லாப் பிசாசுகளும் சிரித்தன.

திருவேங்கடமும் ''நான் அதை அணிந்து கொண்டால் பிறர் கண்களுக்கு நான் தெரியாமல் செய்யும்படியான சக்தி அதற்கு இருக்க வேண்டும்'' என்றான். தலைமைப் பிசாசும் கையை உயர்த்தவே அதன் கைக்கு தொப்பி ஒன்று வந்தது. அந்த வெள்ளை நிறத் தொப்பியை அது திருவேங்கடத்தின் தலையில் வைத்து ''இதுதான் நீ கேட்ட தொப்பி'' என்று கூறிவிட்டு மற்ற பிசாசுகளை அழைத்துக் கொண்டு மறைந்து போயிற்று.



திருவேங்கடம் தலையில் தொப்பியுடன் தலைநகரை அடைந்து அரசாங்கப் பொக்கிஷ அறையை அடைந்தான். அவனை யாரும் தடுக்கவில்லை. ஏனெனில் அவன் அணிந்திருந்த தொப்பி அவனை யார் கண்களுக்கும் புலப்படாமல் செய்து விட்டது. அவனும் பொக்கிஷத்தில் இருந்த பணம், நவரத்தினம் ஆகியவற்றை எடுத்து ஒரு பெரிய பையில்

போட்டு முதுகில் சுமந்துகொண்டு அரண்மனைக்குள் சென்றான்.

அங்கு படுக்கை அறையில் அரசனும் அரசியும் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். திருவேங்கடம் அரசி கழற்றி வைத்திருந்த ஒன்பது வட நவரத்தினமாலையை எடுத்துக் கொண்டான் அரசனருகே இருந்த தங்கக் கிரீடத்தை எடுத்துத் தன் தலையில் தொப்பி மீது வைத்துக் கொண்டு தான் எடுத்துவந்த மூட்டையோடு அங்கிருந்து வெளியே வந்தான். ஆனால் கொஞ்ச தூரம் போனதும் தலையில் கிரீடம் இருந்தது மிகவும் பாரமாக உணர்ந்ததால் அவன் அதை எடுத்துத் தன் கையில் வைத்துக் கொண்டு நடந்தான். கிரீடத்தோடு வெள்ளைத் தொப்பியும் தலையிலிருந்து வந்து விட்டதை அவன் கவனிக்கவில்லை.

மறு நிமிடமே அவன் காவல் வீரர்களுக்குத் தென்பட்டு விட்டான். அவன் கையில் அரசரின் கிரீடமும் முதுகில் பெரிய மூட்டையும் இருப்பது கண்டு திருடனென அவனைப் பிடித்துப் போய் அரசர் முன் நிறுத்தினார்கள். திருவேங்கடம் 'திரு திரு' வென்று முழித்து விசாரணையில் ஏதோ உளறிக் கொட்டவே. அவனை இவ்வாறு செய்யத் தூண்டியது அவனது மனைவி அகிலாண்டம்தான் என்று தெரிந்து போயிற்று.

அரசர் உடனே விசு கொடுத்த தொப்பியை அணிந்து திருவேங்கடம். மனதினுள் அகிலாண்டத்தைத் திட்டுவதைத் தெரிந்து கொண்டார். அவரது கட்டளைப்படி வீரர்கள் வண்டியூருக்குப் போய் அகிலாண்டத்தைப் பிடித்து வந்தார்கள். அவளும் தன் பேராசையால் அவ்விதம் தன் கணவனை செய்யச்சொன்னதாக ஒப்புக்கொண்டாள். நாட்டிற்கும் அரசருக்கும் கெடுதல் செய்த குற்றத்திற்காக திருவேங்கடமும் அகிலாண்டமும் நாடு கடத்தப் பட்டார்கள்.

இதைக் கேட்ட சண்பகம் ''அந்த அகிலாண்டத்தின் பேச்சைக் கேட்டு என் மனம் தடுமாறியது. நல்ல வேளை. பிசாசுகள் நம்மைக் காப்பாற்றின. இனிமேல் அகிலாண்டத்தின் தொணதொணப்பு இல்லை. சொல்வார் பேச்சை நம்பி இனி நான் மோசம் போகமாட்டேன்'' என்று கூறவே, விசுவும் மகிழ்ந்து போனான்.





# யாருக்கு அவமானம்?

ரங்கபுர அக்கிரஹாரத்தில் ரங்காச்சரி தான் பெரும் பணக்காரர். அவருக்குப் பல ஏக்கர் வயல்களும் மாந்தோப்புகள், தென்னந் தோப்புகள் என்று பலவும் இருந்தன அவரது ஒரே மகள் கோமளம். அவளுக்குத் திருமணம் செய்யும் வயது வந்து விட்டதால் அவர் தம் அந்தஸ்த்திற்குத் தக்க இட மாகப் பார்க்கலானார்.

அவரது எதிர்பார்ப்பு பையன் பணக்கார வீட்டில் பிறந்தவனாயும் அழகாயும் நன்கு படித்தவனாயும் இருக்க வேண்டும் என்றும் தன் மகளை மணம் செய்து கொண்டபின் தன் வீட்டிற்கே மாப்பிள்ளை வந்து இருந்து விடவேண்டும் என்பதே. இரண்டு மூன்று இடங்களை அவர் பார்த்துத் திருப்திப்பட்டாலும் அந்த இளைஞர்கள் யாருமே மாமனார் வீட்டோடு வந்து விடத் தயாராக இல்லை. இதனால் கோமளத்தின் திருமணம் நடக்க முடியாமல் இருந்தது.

ஒரு முறை கோமளமும் அவளது தாயாரும் ஒரு உறவினர் வீட்டுத் திருமணத்திற்குச் சென்றிருந்தார்கள். அங்கு கோமளம் வரதன் என்ற இளைஞனைப் பார்த்தாள். அவனோடு ஓரிரு வார்த்தைகள் பேசும் சந்தர்ப்பமும் கிடைத்தது. அவள் அப்போதே தன் மனதை அவனிடம் பறிகொடுத்து விட்டாள். அவள் தன் தாயிடமும் அவனைப் பற்றி விசாரிக்கச் சொன்னாள்.

அவளது தாயாரும் வரதனைக் கண்டு அவனும் சிரித்துக் கொண்டே ''நீங்கள் விசாரிப்பதைப் பார்த்தால் கல்யாண வயதில் உங்களுக்கு ஒரு பெண் இருப்பது போலத் தெரிகிறது. உங்களைப் பார்த்தால் நல்ல வசதி உள்ளவர்கள் என்றும் தெரிகிறது. நான் சாதாரண குடும்பத்தைச் சேர்ந்தவன். என் படிப்பு முடிந்து விட்டது. எங்கள் ஊரில் எனக்கு மூன்று ஏக்கர் நிலம் உள்ளது. அதிலிருந்து கிடைக்கும்

— பரத் வெங்கடராமன் —

வரும்படியில் என் குடும்பத்தை காப் பாற்ற முடியும். நான் உங்கள் அந்தஸ் திற்கு ஏற்றவனல்ல, எனக்கு ஏதாவது பணக்கார இடம் தெரிந்தால் உங்களுக் குத் தெரிவிக்கிறேன்'' என்று பணிவு டன் கூறினான்.

கோமளத்தின் தாயாருக்கும் அவனை மிகவும் பிடித்துப் போயிற்று. அவளும் ''இதோ பார் அந்தஸ்து எல்லாம் நாமாகப் போட் டுக் கொள்ளும் வேலி, எனக்கு உன்னைப் பிடித்துப்போயிற்று. என் பெண் கோமளமும் தனக்கு உன்னைப் பிடித்திருப்பதாகக் கூறுகிறாள். நீ என்ன சொல்கிறாய்?'' என்று கேட் டாள்.

வரதனும் ''நானும் அவளைப் பார்த்து பேசியிருக்கிறேன், எனக்கும் பிடித்திருக்கிறது. ஆனால் அவள் உங் கள் வீட்டில் இருப்பது போல வசதி யாக என் கிராம் வீட்டில் இருக்க முடி யாதே. அவள் என்னை மணந்து கொண்டு என்னோடு என் ஊரில் இருக் கச் சம்மதித்தால் எனக்கு எந்த ஆட்சே பணையும் இல்லை.

கோமளமும் அவளது தாயாரும் ஊர்திரும்பியதும் ரங்காச்சாரியிடம் வரதனைப் பற்றிக் கூறினார்கள். ரங்காச்சாரி முதலில் அதற்கு ஒப்புக் கொள்ளவில்லையானாலும் மனை வியும் மகளும் பிடித்த பிடிவாதத் திற்கு அவர் பணிய வேண்டியதா யிற்று. விரைவிலேயே வரதனுக்கும் கோமளத்திற்கும் திருமணம் நடந்தது வரதனும் தன் மனைவியை அழைத் துக் கொண்டு தன் ஊருக்குப் போய் விட்டான்.

ரங்கச்சாரிக்கோ தனக்குக் கிடைத்த மாப்பிள்ளை சாதாரண குடும்பத்தைச் சேர்ந்தவன் என்பதாலும் தன் வீட் டிற்கு வந்து தன் குடும்பத்தோடு சேர்ந்து இராத காரணத்தாலும் வரதன் மீது கோபமும் எரிச்சலுமாய் வந்தது. அதனால் வரதனை எப்படியாவது



மட்டந்தட்ட அவர் நினைத்தார்.

திருமணமான பின் முதல் தடவை ஆடிப் பண்டிகைக்கு வரதனும் கோமளமும் ரங்கபுரத்திற்கு வந்தனர். அன்று மாலை வரதன் அவ்வூர்க் கோவிலுக்குச் சென்றபோது ரங்காச்சாரி ஊர்ப் பிரமுகர்கள் சிலருடன் அங்கு மண்டபத்தில் அமர்ந்திருந்தார். அவர் வரதனைக் கண்டதும் அவனை அழைத்து அங்குள்ளவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

பிறகு அவர் ''என் மாப்பிள்ளை மிகவும் படித்திருக்கிறார் எனக் கூறிக் கொள்கிறார். இவரிடம் சில கேள்விகளைக் கேட்போம்'' என்று கூறி விட்டு வரதனிடம் ''ஒரு சிறு கேள்வி சில சமயங்களில் கொக்குகள் கூட்டம் கூட்டமாய் பறந்து இனிமையாகக் குரல் கொடுக்கின்றனவே அது ஏன்? என்று கேட்டார். வரதன் ''அது இயற்கையின் நியதி'' என்றான்.

அடுத்து அவர் ''வசந்த காலத்தில் வேப்ப மரமும் புளிய மரமும் துளிர் விடுகின்றனவே அது ஏன்?'' எனவே வரதனும் ''அது இயற்கையின் நியதி'' என்றான். அடுத்து அவர் 'சில மரங்களின் கணுக்கள் வெள்ளையாக இருப்பதேன்?' என்று கேட்க வரதன் ''அது இயற்கையின் நியதி'' என்றான். அப்போது ரங்காச்சாரி ''இந்த மாதிரி பதிலை ஒன்றாவது வகுப்பில் படிக்கும் பையன் கூடச் சொல்வான். இது தவறு. கொக்கின் கழுத்து நீளமாக இருப்பதால் இனிய ஒலி வருகிறது. புளி, வேம்பு ஆகிய மரங்களின் வேர்கள் பூமிக்குள் போயிருப்பதால் வசந்த காலத்தில் அவை துளிர் விடுகின்றன. மரங்களிண் கணுக்களில் மாடுகள் தம் கொம்புகளைத் தேய்ப்பதால் அவை வெள்ளையாக இருக்கின்றன'' என்று கூறிவிட்டுச் சுற்றிலும் பார்த்தார்.

அப்போது வரதன் ''தவளைகள் கூட 'பேக் பேக்'கென்று ஒரே சுருதியில் தாளம் தவறாமல் ஒலிக்கின்றன. அவற்றின் கழுத்து நீளமாக இல்லையே. மூங்கில் மரம் கூட வசந்தத்தில் துளிர்விடுகிறது, அதன் வேர் ஆழமாகப் போகவில்லையே. என் மாமனாரின் கழுத்திலுள்ள கட்டியின் மேல் பகுதி வெள்ளையாக இருக்கிறதே. அதை எந்த மாடு வந்து தேய்த்தது?'' என்று கேட்டான்.

இதைக் கேட்ட ரங்காச்சாரி அவமானத்தால் தலை குனிந்தார்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1997 பிப்ரவரி மாத இதழில் வெளியிடப்படும்.



MAHANTESH C. MORABAD



K. SUBBA RAO

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ டிசம்பர் 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

## அக்டோபர் மாதப் போட்டி முடிவு

| | |
|---|---|
| முதலாவது போட்டோ | **அக இருள் அகல்கிறது.** |
| இரண்டாவது போட்டோ | **புற இருள் கவிழ்கின்றது.** |
| பரிசு பெற்றவர் | **ஆர். திலகவதி, சென்னை–38.** |


# அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ.72.00

*சந்தா அனுப்ப வேண்டிய முகவரி :*

**டால்டன் ஏஜென்சீஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை–600 026.**



Printed by B.V. REDDI at Prasad Process private Ltd., 188, N.S.K. Salai, Madras - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026 (India), Controlling Editor: NAGI REDDI.



The stories, articles and designs contained herein are exlusive property of the Publishers and copying or adapting them in any manner will be dealt with according to law.

# எல்ஐசி என்றால் பாதுகாப்பு




வேகப் பந்து, கோபமாக வந்து தாக்கும் போது உங்கள் பேட்கள் கால்களை மட்டுமே பாதுகாக்கிறது. ஆனால் லைஃப் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா அதாவது எல். ஐ. சி. வாழ்நாள் முழுவதும் உங்களுக்கு பாதுகாப்பு தருகிறது. எல். ஐ. சி. பாலிசி என்றால் என்ன என உங்கள் பெற்றோரிடம் கேளுங்கள். அது எப்படி உங்களை பத்திரமாக பாதுகாக்கிறது என அவர்கள் விளக்குவார்கள். ஏனெனில், எல். ஐ. சி. உங்கள் மீது அக்கறை கொண்டுள்ளது.



**லைஃப் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா**

காப்பீடு செய்யுங்கள். பாதுகாப்பு பெறுங்கள்.

R.K.SWAMY/BBDO LIC 5624 TAM

# நல்ல பழக்க வழக்கங்கள்













everest/96/HPL/94 tm

Apsara®
NON-DUST
ERASER

அப்ஸரா நான்-டஸ்ட் எரேஸர் அனைத்து தவறுகளை சுத்தமாக மற்றும் தூய்மையாக அழிக்கிறது. ஒருவித படிவங்களையோ அல்லது கறைகளையோ ஏற்படுத்துவதில்லை. அழுக்கில்லை, தொல்லையில்லை.

உங்கள் புத்தகங்களை தூய்மைப்படுத்த தூய்மையான வழி

ஹிந்துஸ்தான் பென்சில்ஸ் லிமிடெட் வழங்கும் ஒரு தரமான தயாரிப்பு